**கோ-ஆப்டெக்ஸ் காலத்திற்கேற்ற புதுமையுடனும்**
**பாரம்பரியப் பெருமையுடனும்...**
**1935 முதல் மிகச் சிறந்த இரகங்களை**
**உங்களுக்காகவே வழங்குகிறது.**

- ★ காஞ்சிபுரம் அசல் பட்டு சேலைகள்
- ★ சேலம் தரமிக்க பட்டு சேலைகள்
- ★ ஆரணி தரமிக்க பட்டு சேலைகள்
- ★ கோயமுத்தூர் உயர்ரக பருத்தி சேலைகள்
- ★ உறையூர் பருத்தி சேலைகள்
- ★ சேலம் உயர்ரக பருத்தி சேலைகள்
- ★ மதுரை சுங்கடி புடவைகள்
- ★ சென்னிமலை ஏற்றுமதி தரம் வாய்ந்த படுக்கை விரிப்புகள்
- ★ கோவை ஏற்றுமதி தரம் வாய்ந்த எரலை துண்டுகள் (டவல்கள்)
- ★ குறிஞ்சிப்பாடி ஏற்றுமதி தரம் வாய்ந்த லுங்கிகள்
- ★ தாத்தையங்கார்பேட்டை வேட்டிகள்




**இவை அனைத்தும் உங்களுக்காக வழங்குகிறது கோ-ஆப்டெக்ஸ்.**
**வாருங்கள். பாருங்கள். வாங்குங்கள் - முழு திருப்தியைக் கண்டு மகிழுங்கள்.**



கோ-ஆப்டெக்ஸ்

Visit us at: www.tn.gov.in
www.cooptex.com

ஆண்டுதோறும் 1.00.000 பட்டு புடவைகள். 3.00.000 பருத்தி புடவைகள் 10.00.000 பருத்தி விரிப்புகள் மற்றும் 10.00.000 டவல்கள் விற்பனை செய்யப் படுகின்றன. டெல்லி. மும்பாய். கொல்கத்தா. பெங்களூர். அகமதாபாத். கோவை. திருச்சி மற்றும் இந்தியாவின் பிற முக்கிய நகரங்களில் எங்கள் சேவை உங்களுக்காக.

தலைமுறைகளாய் தொடரும் பந்தம் - கோ-ஆப்டெக்ஸ்



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# எழுத்தறிவித்தவன் இறைவனாவான்!

பெற்றோருக்கு அடுத்தபடியாக கல்வி கற்பிக்கும் ஆசானை தெய்வத்திற்கு சமமாகப் போற்றுகிறது நம் கலாசாரம். காலஞ்சென்ற பாரதக் குடியரசுத் தலைவரான டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள் தலைசிறந்த ஆசிரியராகத் தன் பணியைத் தொடங்கியவர். அயல் நாட்டுப் பல்கலைக் கழகங்களெல்லாம் அவரை சிறப்பிக்கும் அளவிற்கு புகழுடன் விளங்கியவர். ஆசிரியராகத் தன் பணியைத் தொடங்கி குடியரசுத் தலைவரின் பீடத்தில் அமர்ந்த ஈடு இணையற்ற தலைவர். அவருடைய பிறந்த தினமான செப்டம்பர் 5ஆம் தேதியை ஆசிரியர்கள் தினமாக அரசு அறிவிக்கச் செய்யுமளவிற்கு ஆசிரியர் பதவிக்குப் பெயரும் புகழும் ஈட்டித் தந்தவர்.

நல்ல ஆசிரியர் என்பவர் மாணவர்களின் அறிவுக் கண்களை மட்டும் திறக்காமல் அவர்களுக்கு நல்லொழுக்கத்தையும் பண்பினையும் மனித நேயத்தையும் புகட்டுபவர். இது பழங்காலத்தில் குருகுல முறையில் கல்வி கற்பித்து வந்ததிலிருந்தே தொடர்கிறது! ஒரு மாணவனை எதிர்காலத்தில் நல்ல குடிமகனாக ஆக்க வேண்டிய மகத்தான பொறுப்புடையவர் ஆசிரியர்.

டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள் சொல்வதைக் கேளுங்கள். ''ஆசிரியர்கள் தெய்வப் பிறவிகளாக இருத்தல் அவசியம். நல்லொழுக்கம், நற்பண்புகள், மனித நேயம், மாணவர்கள் பால் அன்பு ஆகியவற்றைக் கொண்ட தியாக சீலராக இருக்க வேண்டும்.'' அத்தகைய ஆசிரியர்கள் மீது மாணவர்கள் அளவற்ற பக்தியும் மரியாதையும் கொண்டு ஒழுகுவர்.

நல்லதொரு பண்பாடு உருவாக பல நூற்றாண்டுகள் தேவை. ஆனால் பாரத மக்களுக்கு அவை காலங்காலமாக இரத்தத்தில் ஊறி வந்துள்ளது. அதுவே நமக்கு எதிர்காலத்திலும் கை கொடுக்கும் என்று நம்புவோம்.

ஆசிரியர் : **விஸ்வம்**

Visit us at : http://www.chandamama.org









அம்புலிமாமா மதிமுகம் : 58 செப்டம்பர் : 2005 புன்னகை : 09



## பொருளடக்கம்



## சிறப்புப் படைப்பாக

















**SUBSCRIPTION**

For USA and Canada
Single copy $2
Annual subscription $20

*Remittances in favour of Chandmama India Ltd.*
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony
Ekkatuthangal,
Chennai - 600 097
E-mail :
subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**

இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத் தபால் வாயிலாக பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900/- இந்தியாவிற்குள் ரூ.144/- **புக்போஸ்டில்** உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணியாடரிலோ **சந்தமாமா இந்தியா லிமிடெட்** என்ற பெயரை எழுதி அனுப்பவும்.

## வாசகர்களுக்கானக் கதைப் போட்டி (பிப்ரவரி)

### தேர்ந்தெடுக்கப் பட்ட சிறந்த கதை



கணபதியின் இந்த திடீர் கேள்வியாலும் விருப்பம் இல்லாத காரணத்தாலும் பதில் எதுவும் கூற முடியாமல் மௌனமாக நின்றான். ஒரு தாய்க்கு எத்தனை குழந்தைகள் இருந்தாலும் செல்வங்களில் சிறந்த செல்வமாக விளங்கக் கூடிய குழந்தைச் செல்வத்தை தான் எவ்வளவு சிரமப்பட்டு, ஏன் ஒரு வேளை சாப்பாபட்டிற்குக் கூட வழி இல்லாமல் வாழ்க்கையை நடத்தி வந்தாலும் தன் குழந்தையை உறவினருக்கோ, மற்றவர்களுக்கோ கொடுக்க மனம் வராது.

ஒரு வேளை கணபதி வற்புறுத்திக் கேட்டு இருந்தாலும் முருகேசன் இதைத் தான் கூறி இருப்பான். ஆனால் கணபதியோ முருகேசனிடம் குழந்தையைப் பெற்றுக் கொள்ளவேண்டும் என்று முழு நோக்கத்தோடு இருந்தான். அதனால் ஒரு வேளை முருகேசனிடம் கேட்டு பலன் கிடைக்காமல் போயிருந்தால் கணபதி நேராக முருகேசனின் பிள்ளைகளிடம் தன் விருப்பத்தைக் கூறி இருப்பான். இதைக் கேட்டு குழந்தைகள் மட்டும் சும்மா இருப்பார்களா என்ன, அவர்களும் தங்கள் தந்தை என்ன சொல்கின்றார்களோ அதுவே எங்கள் விருப்பம் எனக் கூறி இருப்பார்கள்.

ஒரு மனிதன் வாழ்க்கையில் எந்த செல்வத்தையும் கொடுத்து விடுவான். ஆனால் குழந்தையை மட்டும் யாருக்காகவும் கொடுக்க மாட்டான். வாழ்கையில் எந்த செல்வத்தை இழந்தாலும் மறுபடியும் பெற்றுக் கொள்ளலாம். ஆனால் குழந்தை செல்வத்தை மட்டும் அவ்வாறு பெற முடியாது.

**த.அஜீஸ்,** (7ஆம் வகுப்பு) த/பெ. த.காதர் உசேன்
ப.எண் 16/36, பிள்ளையார் கோயில் தெரு,
மேட்டுப்பாளையம், மேற்கு மாம்பலம்,
சென்னை - 600 033.



# பாலுவின் சாமர்த்தியம்

லட்சுமிபுரத்தில் வசித்து வந்த ஜமீன்தார் ர ாமசாமியிடம் ப ாலு வேலை பார்த்து வந்தான். அவருடைய வயல்களில் உழவுப்பணி செய்வதைத் தவிர, அ ருகிலுள்ள நகரத்திற்குச் சென்று ஜமீன்தாருக்குத் தேவையான பொருட்களை வாங்கி வருவதும் உண்டு. அவனை மிகவும் வாக்கு சாதுரியமுடையவன் என்றும், சாமர்த்தியசாலி என்றும் கிராமத்தினர் வெகுவாகப் புகழ்வதுண்டு. ஆனால் பாலுவிற்கு இந்தப் புகழ்மாலைகளால் மகிழ்ச்சி உண்டாவதில்லை.

''என் சாமர்த்தியத்தைப் பற்றி ஊரார் புகழ்ந்து என்ன லாபம்? என்னுடைய உழைப்பிற்குத் தகுந்த ஊதியத்தை ஜமீன்தார் தருவதில்லை. அவர் கொடுக்கும் கூலி சாப்பாட்டிற்கே போதவில்லை!'' என்று குறைபட்டுக் கொள்வான்.

ஜமீன்தாரிடம் இரண்டு ஜோடி காளை மாடுகள் இருந்தன. அவற்றில் ஒரு ஜோடி கிழடு தட்டிப் போயிற் று. ஆகவே புதிதாக ஒரு ஜோடி உழவு மாடு வாங்க ஜமீன்தார் தீர்மானித்தார். தன் மகன் அர்ஜுனனையும் பாலுவையும் அழைத்துக் கொண்டு, அருகிலுள்ள வாராந்திர மாட்டுச் சந்தைக்குச் சென்றார். சந்தையில் ஒரு ஜோடி இளங்காளை மாடுகளை வாங்கியபின் வீடு திரும்பினார். இளைய ஜமீன்தார் அர்ஜுனன் அ வற்றை வ ண்டியில் பூட்டி, வண்டி இழுக்கப் பழக்கினான்.

அப்போது பாலு அர்ஜுனனிடம் ''சின்ன எசமான்! காளைமாடுகள் இரண்டும் பயமறியாத இளங்காளைகள். இவை வண்டி இழுக்கும்போது நீங்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்! இல்லையேல், ஏதாவது விபத்து நேரிடும்!'' என்று அறிவுரை வழங்கினான். ஆனால் அர்ஜுனன் பாலுவின் அறிவுரையை மதிக்கவில்லை.

இவ்வாறு இரண்டு வாரங்கள் கழிந்தன. ஒருநாள் இளைய ஜமீன்தார் அர்ஜுனன் வயல்களைப் பார்வை இட்ட பிறகு, தனது இளங்காளைகள் பூட்டிய வண்டியில் வெகு விரைவாக வீடு நோக்கித் திரும்பிக் கொண்டு

காயத்ரி சங்கரன்

இருந்தான். திடீரென்று காளைகள் இரண்டும் முன்னிலும் அதிவிரைவாக ஓடத் தொடங்கின. அப்போது சாலையின் திருப்பத்தில் பாலு வந்து கொண்டிருக்க, அதிவேகமாகத் திரும்பிய காளைகள் அவன் மீது மோதின. பாலு தலை குப்புற விழுந்தாலும், அடி ஒன்றும் பலமாகப் படவில்லை.

ஆனால் பாலு 'ஓ' என்று அலறி, மண்ணில் புரண்டு புரண்டு புழுப்போல் துடித்தான். அருகிலிருந்த மற்றவர்கள் உடனே ஓடி வந்து அவனைத் தூக்கிக் கொண்டு போய் அவன் வீட்டில் கிடத்தினார்கள். பாலு கூக்குரலிட்டு வலியில் துடிப்பவன் போல் பாசாங்கு செய்தான். அதைக் கண்ட உடன் இருந்தவர்கள் உ ண்மையிலேயே அவனுக்கு பலத்த அடி பட்டுள்ளது என்று நினைத்து ஜமீன்தாரிடம் ஓடினர்.

''ஐயா! சின்ன எசமான் கண்மண் தெரியாமல் வேகமாக வண்டியை ஓட்டி பாலுவின் மீது மோதி விட்டார். அவன் வலியில் துடிக்கிறான். நீங்கள்தான் அவனுக்கு உதவி செய்ய வேண்டும்'' என்று வேண்டினர். அதைக் கேட்ட ஜமீன்தார் பயந்துபோய் உடனே பாலுவின் வீட்டிற்குச் சென்று அவன் மனைவியிடம் இரண்டாயிரம் ரூபாய் கொடுத்து விட்டு, ''என் மகன் செய்த தவறுக்கு நான் மிகவும் வருந்துகிறேன். உன் கணவன் உடல் நிலை சரியாகும் வரை ஓய்வெடுக்கட்டும். அதற்குப் பிறகும் அவன் கடினமான வேலை செய்யாமல் வயலை மேற்பார்வை செய்தால் போதும்'' என்றார்.

ஜமீன்தார் சென்றதும், பாலுவின் மனைவி, ''போதும் உங்கள் நாடகம்! உங்கள் முதலாளியை நன்றாக ஏமாற்றி விட்டீர்கள். அவர் எவ்வளவு நல்லவர்! உடனே சென்று உண்மையை ஒப்புக் கொண்டு பழையபடி வேலை செய்யுங்கள்!'' என்றாள்.

இதைக் கேட்டதும், ''என்ன இப்பொழுதே செல்வதா? முடியாது. ஒரு மாதம் வரை ஓய்வு எடுத்துக் கொள்கிறேன் இல்லையேல் ஊர் மக்கள் என்ன ஏமாற்றுபவன் என்று கூறுவார்கள். ஜமீன்தார் இதுவரை என்னை நன்கு வேலை வாங்கி வந்தார். நான் இதுவரை உழைத்ததற்கு இந்தப் பணம் அவர் கொடுத்த வட்டி என்று எடுத்துக் கொள்ளலாம். போ. போய் ஏதாவது வேலையைப் பார்'' என்றான்.





# வேலங்குளத்து மோகினிப் பிசாசு

கமலா திருமணமாகி கணவன் வீட்டிற்கு வந்ததும் தெரிந்து கொண்ட முதல் விஷயம் தன் கணவன் ராமு ஒரு சோம்பேறி என்பதே! தன்னுடைய தள்ளாத வயதில் ராமுவின் தந்தை வயலில் வேலை செய்ய, ராமு வேலை எதுவும் செய்யாமல் ஊரைச் சுற்றிக் கொண்டு பொழுது போக்கி வந்தான். அவன் தவறாமல் செய்த ஒரேயொரு வேலை, வேளா வேளைக்கு வீட்டில் அமர்ந்து வயிறு புடைக்க உண்பதுதான்!

கணவனின் செயல் பொறுக்காத கமலா ஒருநாள் ராமுவிடம், ''உங்கள் தந்தைக்கு வயதாகி விட்டது. விவசாயப் பொறுப்பை நீங்கள் ஏற்றுக் கொண்டு, அவருக்கு ஓய்வு கொடுங்கள்,'' என்றாள்.

அதைக் கேட்டு சிரித்த ராமு, ''முன்பெல்லாம் வீட்டு சமையலைக் கூட அவர் தான் செய்து கொண்டு இருந்தார். நீ வந்தபிறகு அந்த வேலை அவருக்கு மிச்சம். இப்போது அவருக்கிருப்பது வயல் வேலை ஒன்றுதான்! அதை நன்றாகச் செய்யட்டும்!'' என்றான்.

தன் கணவனிடம் பேசிப் பயன் இல்லை என்றறிந்த கமலா தன் மாமனாரிடம் ஒருநாள் ''நீங்கள் தள்ளாத வயதில் ஏன் வயலில் வேலை செய்கிறீர்கள்? அதை உங்கள் பிள்ளை செய்யட்டும்!'' என்று சொல்லிப் பார்த்தாள்.

அதற்கு அவர், ''அவன் தாயில்லாப் பிள்ளை என்பதால், அவனை மிகவும் செல்லமாக வளர்த்து விட்டேன். அவனிடம் வேலை வாங்க எனக்கு விருப்பமில்லை. அவன் இப்படியே இருக்கட்டும்'' என்றார்.

அன்று மாலையே, வயலில் ஒரு நாகம் தீண்டி ராமுவின் தந்தை இறந்து விட்டார். ஒரு வாரத்திற்குப் பிறகும் ராமு முன்போலவே பொறுப்பின்றி இருந்தான்.

-செந்தில் குமார்-



ஒருநாள் உணவு பரிமாறும் பொழுது, ''இனிமேலாவது பொறுப் பாக விவசாயம் செய்யுங்கள்!'' என்று கமலா சொல்ல, ''விவசாயத்தைப் பற்றி மூச்சுவிடாதே!'' என்று எரிச்சலுடன் ராமு பதில்அளித்தான். கமலா பெருங்கவலையில் ஆழ்ந்தாள். பொறுப்பற்ற கணவனை எவ்வாறு திருத்துவது என்றே அவளுக்குத் தோன்றவில்லை. தன் எதிர் காலத்தைப் பற்றி கவலைப்பட்டுக் கொண்டேயிருந்ததால், அன்றிரவு அவள் சமையலே செய்யவில்லை.

ஊரைச் சுற்றிவிட்டு வந்த ராமு உணவு நேரத்திற்கு வீடு திரும்பினான். தன் மனைவி சமையல் செய்ய வில்லை என் றறிந்ததும் கோப முற்றான். ஆனால் கமலா பிடிவாத மாக, ''வயலில் இறங்கி வேலை செய்தால்தான், இனி உனக்கு வோறு!'' என்று அவனைத் திட்ட, கோபங்கொண்ட ராமு வீட்டை விட்டு வெளியே சென்று விட்டான்.

தான் எங்கே போகிறோம் என்றே தெரியாமல் மனம் போனபடி சென்ற ராமு வேலங்குளத்தை அடைந்தான். குளத்தின் கரையில் ஒரு சில பெரிய ஆல மரங்களும் இருந்தன.

'சொந்தமாக நிலம் இருந்தும் ஒரு வேளை உணவில்லாமல் தான் இப்படி பசியோடு அலைய வேண்டி இருக்கிறதே!' என்று வெறுப்புடன் குளக்கரையோரமாக நடந்து கொண்டு இருந்த ராமு, ஓர் ஆலமரத்தின் வேர் தடுக்கிக் குளத்திற்குள் விழுந்து விட்டான். குளத்தின் ஆழம் அதிகம். மூழ்கவிருந்த ராமுவின் கைகளில் ஆல மரத்தின் ஒரு விழுது அகப்பட அதைப் பிடித்துக் கொண்டு கரையேறி னான். அப்போது அவன் சற்றும் எதிர் பாராமல் பெண்ணுருவம் கொண்ட ஒரு மோகினிப் பிசாசு அவன் எதிரே குதித்தது.

''அடப்பாவி! நீ தற்கொலை செய்து கொள்ள ஏன் முயன்றாய்? ஆலமரத்தின் விழுதை நான்தான் உன்னிடம் நகர்த்தினேன். இல்லை யேல் குளத்தில் மூழ்கி இறந்து இருப்பாய்! நல்ல காரியங்கள் செய்து பரலோகம் அடைய நான் வெகு காலமாக இங்கே தங்கியிருக்கிறேன். அதிருக்கட்டும்! நீ யார்? உனக்கு அப்படியென்ன கவலை?'' என்று மோகினிப் பிசாசு கேட்டது.

பிசாசைக் கண்டு முதலில் பயந்தாலும் பிறகு இது ஒரு நல்ல

மனம் படைத்த பிசாசு என்று அறிந்து கொண்ட ராமு வாழ்க்கை வெறுத்தவன் போல் சோகமாக நடித்தான். ''நான் உயிரோடு இருந்து என்ன பயன்? என்னிடம் சல்லிக்காசு கூட இல்லை. இந்த நிலையில் நான் என் மனைவியை எவ்வாறு காப்பாற்றுவேன்? நான் உயிரை விடுவதே மேல்!'' என்று நடித்தான்.

''அப்படி எண்ணாதே!'' என்று கூறிய பிசாசு ஒரு மூட்டையை அவனிடம் கொடுத்து, ''இதிலுள்ள பணத்தை வைத்துக் கொண்டு நலமாக வாழ்வாயாக!'' என்றது. ராமுவிற்கு எதிர்பாராதவிதமாக பணம் கிடைத்ததில் ஒரே மகிழ்ச்சி.



பணத்துடன் வீட்டிற்குத் திரும்பிய ராமு, அதை கமலாவிடம் விட்டு எறிந்து விட்டு, ''என்னை என்ன வென்று நினைத்தாய்? இதோ பார் பணம்! என் சொந்த முயற்சியால் சம்பாதித்தது!'' என்றான். கமலாவிற்குத் தன் கண்களையே நம்ப முடியவில்லை.

ஆனால் கமலாவின் மகிழ்ச்சி நீடிக்கவில்லை. மறுநாளே அதிலுள்ள பணத்தில் சிறிது எடுத்துச் சென்ற ராமு நண்பர்களுடன் சூதாடி பணத்தை இழந்தான். பிறகு தினமும் சிறிது பணம் எடுத்துச் செல்வதும், சூதாடுவதுமாக பணத்தையெல்லாம் சூராடியேத் தொலைத்தான். இடையில் கமலா, ''இந்தப் பணத்தை வைத்து ஏதாவது வியாபாரம் ஆரம்பிக்கக் கூடாதா?'' என்று கேட்டால் அவள் மீது எரிந்து விழுவதுண்டு.

கையிலுள்ள பணம் தீர்ந்ததும் மறுபடியும் ஓரிரவு ராமு வேலங்குளத்திற்குச் சென்று தற்கொலை செய்து கொள்வது போல் பாசாங்கு செய்ய மோகினிப் பிசாசு மீண்டும் பணம் கொடுத்து உதவியது. இந்த முறை பிசாசு கொடுத்த பணத்தை இருபதே நாள்களில் ராமு சூதாடித் தீர்த்தான். பணம் தீர்ந்தவுடன் பழையபடி ராமு இரவு வேளையில் வேலங்குளம் சென்றான். அவனுக்குப் பணம் எவ்வாறு கிடைக்கிறது என்ற மர்மத்தை அறிய, இந்த முறை கமலாவும் ரகசியமாக அவனைப் பின் தொடர்ந்தாள். ராமுவின் தற்கொலை நாடகத்தையும், பிசாசு அவனுக்குப் பணம் கொடுப்பதையும் தானேக் கண் கூடாகப் பார்த்தாள்.

பணத்துடன் ராமு அந்த இடத்தை விட்டு அகன்றதும், கமலா தானும்

தற்கொலை புரிபவள் போல் நடித்தாள். உடனே ஆலமரத்திலிருந்து குதித்த அதே மோகினிப் பிசாசு கமலாவைத் தடுத்து நிறுத்தியது.

''அடிப்பெண்ணே! நீ ஏன் உன் உயிரை மாய்த்துக் கொள்ள முயற்சிக் கிறாய்?'' என்று பிசாசு கேட்க ''நீதான் காரணம்!'' என்றாள் கமலா.

''நானா!'' என்று திகைத்தது பிசாசு. ''நான் எப்படிக் காரணம்?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டது.

''இதோ வந்து சென்றாரே, அவர் தான் என் கணவர். அவரை பொறுப்பற்ற சோம்பேரியாக ஆக்கி இருப்பது நீ. ஒவ்வொரு முறையும் தற்கொலை நாடகமாடி உன்னை ஏமாற்றி பணம் பெற்றுச் சென்று அதைக் குடும்பத்திற்குப் பயன் படுத்தாமல் சூதாடி விரயமாக்கு கிறார்'' என்றாள்.

திடுக்கிட்டுப்போன பிசாசு, ''கடவுளே! நன்மை செய்வதாக நினைத்து நான்பாவம்தான் செய்திருக் கிறேன். நான் இப்போது என்ன செய்யட்டும்?'' என்று கேட்டது. கமலா செய்ய வேண்டியதை அதன் செவி களில் எடுத்துரைத்தாள். பிசாசும் அவ்வாறே செய்ய ஒப்பியது.

இந்த முறை பதினைந்தே நாள் களில் பணத்தை விரயமாக்கிய ராமு, மீண்டும் வேலங்குளத்திற்குச் சென்றான். பழையபடி தற்கொலை நாடகம் ஆடியவனைத் திகைக்க வைத்தது பிசாசின் சிரிப்பு.

''சோம்பேறி ராமு! நீ சோம்பேறி மட்டுமல்ல, நீ ஒரு சூதாடி! மனைவி யின் உழைப்பில் வாழும் வெட்கங் கெட்ட பொறுப்பற்ற மிருகம். தாராளமாக குளத்தில் மூழ்கி உயிரை விடு. பிறகு பேயாக மாறி என்னுடன் இதே மரத்தில் தங்கலாம்?'' என்று கூறி மறைந்து விட்டது.

பிசாசின் வார்த்தைகளைக் கேட்டு ராமு முதன் முறையாகத் தன் பொறுப் பற்ற செயல்களுக்காக வருந்தினான். மௌனமாக வீட்டையடைந்த ராமு, மறுநாள் காலை தன் வயலை நோக்கி பொறுப்புள்ள குடும்பத்தலைவனாக நடந்தான். அதைக் கண்டு பேருவகை அடைந்த கமலா, தன் கணவனைத் திருத்திய மோகினிப் பிசாசுக்கு மானசீகமாக நன்றி கூறினாள்.





# மாய மந்திரவாதி

## 22

*(சூரியபூபதி தன் கோட்டையை பாதுகாக்கச் சென்று விட்டான். மாயக்குரங்கு தன் குரு மித்யாமிச்ரருடன் சேர்ந்து கொண்டது. மாயமந்திரவாதி தன் குருவான கரடிபாதரைக் காப்பாற்ற விரைந்தான். அதற்குமுன் தன் மந்திரக்கோலினால் மாயக்கரடிக்கு சுய உருவம் கொடுத்தான். அதன்பிறகு...)*

எல்லாரும் சென்று விட்டபிறகு, காளிவர்மன் மட்டுமே மன்னர் ஜிதகேதுவுடன் இருந்தான். காளிவர்மனை நோக்கி, ''காளிவர்மா! சூரிய பூபதியின் மகளை தத்து எடுத்துக் கொள்வதாக ஏற்கெனவே அறிவித்து விட்டேன். இப்போது அவளைக் கவர்ந்து செல்ல மித்யாமிச்ரரும் மாயக்குரங்கும் நயவஞ்சகமாக ஈடுபட்டுள்ளன. இப்போது நாம் அவளை எப்படி மீட்பது? நமது படையுடன் செல்வோமா?'' என்றார் மன்னர். ''வேண்டாம் மகாராஜா! நான் உக்கிரதண்டனை மட்டும் அழைத்துக் கொண்டு செல்கிறேன். நீங்கள் சில வீரர்களுடன் பின்னே வாருங்கள்!'' என்றான்.

பிறகு காளிவர்மனும் உக்கிர தண்டனும் செல்லத் தொடங்கு கையில் கரடியாயிருந்து சுய உருவம் பெற்ற தலையாரியும் அவர்களுடன் சேர்ந்து கொண்டான். மூவரும் காட்டில் மித்யாமிச்ரரைத் தேடிச் செல்கையில் ஒரு பெரிய கரடியைப் பார்த்தனர். காட்டுச் செடி கொடிகளை உடலெங்கும் சுற்றியிருந்த அந்தக்



கரடியைக் கண்டு திகைத்த காளி வர்மன் ''உக்கிரதண்டரே! இந்தக் கரடி மந்திரவாதிகளின் அடிமையோ, என்னவோ!'' என்றான்.

''இது அந்த நயவஞ்சக மித்யா மிச்ரரின் உதவியாளன் என்று தோன்றுகிறது. இதைப் பின் தொடர்ந்து சென்றால் மந்திரவாதி இருக்கும் இடம் தெரிந்துவிடும்,'' என்றான். மூவரும் கரடியைப் பின் தொடர்ந்து செல்லும் போது ஒரு மரத் தடியில் நண்பரான மாய மந்திர வாதியும் ஒரு தாடிக்கார கிழவரையும் சூரியபூபதியையும் கண்டதும் அவர்கள் அதிர்ச்சி அடைந்தார்கள்.

அவர்களைப் பார்த்து விட்ட மந்திரவாதி ''காளிவர்மா! உக்கிர தண்டா! நில்லுங்கள்! இதுதான் என்னுடைய குரு கரடிபாதர். எங்களது பரம எதிரியான மித்யாமிச்ரர் சூரிய பூபதியின் மகள் காஞ்சனலதாவைக் கடத்தி சென்று விட்டதாக என் குரு கூறுகிறார். இப்போது அவளை அவனுடைய பிடியிலிருந்து மீட்க வேண்டும்!'' என்றான்.

அப்போது அவர்கள் முன்னே சென்று கொண்டிருந்த கரடி மாய மந்திரவாதியின் அருகில் வந்து நின்றது. அப்போதுதான் கரடி மந்திர வாதியின் உதவியாளன் என்று காளி வர்மனுக்குப் புரிந்தது. காளிவர்மன் மனத்தில் ஓடிய எண்ணத்தைப் புரிந்து கொண்ட மந்திரவாதி ''ஆகா! இந்தக் கரடியைப் பின் தொடர்ந்து வந்ததால் தான் நீங்கள் எங்களைக் கண்டு பிடிக்க முடிந்தது. மித்யாமிச்ரர் என்ன செய்தான் தெரியுமா? பல்லுகேஸ்வரி கோயிலின் அருகில் என் குருவை மரத்தில் கட்டி வைத்து சித்திரவதை செய்து கொண்டிருந்தானாம்! இந்தக் கரடிதான் அவனிடம் இருந்து காப்பாற்றியது'' என்றான்.

அப்போது உக்கிரதண்டன் கரடி பாதரை நோக்கி, ''குருவே! என் சகோதரன் காலதண்டன் எங்கே?'' என்று கேட்க, அதற்கு கரடிபாதர், ''இந்தக் கேள்வியை நீ மித்யா மிச்ரரிடம் தான் கேட்க வேண்டும். தனது மந்திரசக்தியால் உன் சகோ தரனை அவன் மயக்கி ஊமையாக மாற்றி தன் குற்றேவல்களுக்குப் பயன்படுத்தி வருகிறான். அவனைக் கண்டு பிடித்தால் அவன் மூலம் மித்யாமிஸ்ரரையும் அவனிடம் சிறைப்பட்டிருக்கும் இளவரசி காஞ்சனலதாவையும் காண முடியும்'' என்றார். உடனே காளிவர்மன்

''அந்தப் பாதகம் மித்யா மிச்ரரையும் இளவரசியையும் கண்டு பிடிக்கும் பொறுப்பை என்னிடம் விடுங்கள். இளவரசியை மீட்டு அந்தக் கயவனையும் கொன்று விட்டுத் திரும்புவேன். அப்புறம் இந்த நாட்டில் உள்ள எல்லா மந்திர வாதிகளையும் ஒழித்துக் கட்டப் போகிறேன்!'' என்று சூளுரைத்தான்.

''எல்லா மந்திரவாதிகளையும் என்றால் எங்களையுமா ஒழித்துக் கட்டப் போகிறாய்?'' என்று மாய மந்திரவாதி கோபத்துடன் சீறினான்.

உடனே இடையில் குறுக்கிட்ட சூரியபூபதி, ''காளிவர்மா! சற்றுப் பொறுமையாக இரு! உன் கோபத்தை நமது நண்பரான மந்திரவாதி மீது ஏன் காட்டுகிறாய்? மந்திரவாதி நமக்கு நன்மையே செய்வார். மாயக்குரங்கு ஒரு சங்கின் ஒலியைக் கேட்டதும் அது தன்னுடைய குருவின் அழைப்பு என்று தெரிந்து கொண்டு ஒலி வந்த இடத்தை நோக்கி ஓடத் தொடங்கியதல்லவா? அந்த சங்கொலியை எழுப்பியவன் நமது எதிரி மித்யா மிச்ரரின் கையாள். அவனைப் பிடிக்க எனக்கு மந்திரவாதிதான் பெரிதும் உதவினார். ஆனால் அவனைஎவ்வளவு துன்புறுத்தியும் தன்னுடைய தலைவர் மித்யாமிச்ரர் இருக்கும் இடத்தை அவன் கடைசி வரை காட்டிக் கொடுக்கவில்லை. அதனால் அவனைக் கொல்ல நேர்ந்தது'' என்றான்.

உடனே சமாதானமடைந்த காளிவர்மன் ''சரி! போகட்டும்! இப்போது



இளவரசியை அவனிடமிருந்து மீட்போம்,'' என்றான். அதன்பின் அவர்கள் தனித்தனியாகப் பிரிந்து சென்றனர்.

சிறிதுதூரம் சென்ற காளிவர்மனின் கண்களில் மலைத்தொடர்களும் அவற்றின் இடையே ஒரு நீர் வீழ்ச்சியும் அது சங்கமமாகும் ஒரு பெரிய ஏரியும் தென்பட்டன. ஏரிக்கரையில் ஒரு திரிசூலம் நிலத்தில் செருகி வைக்கப்பட்டிருந்தது. ஏரியின் நடுவில் ஒரு கட்டுமஸ்தான உடல் கொண்ட தாடிக்காரன் கண்களை மூடிக்கொண்டு இடுப்பளவு நீரில் அமிழ்ந்து மந்திரம் உச்சரித்துக் கொண்டிருந்தான். அவனைப் பார்த்தவுடனே தான் தேடிக் கொண்டிருக்கும் மித்யாமிச்ரர் அவன்தான் என்று அவனுக்குப் புரிந்து விட்டது.

அவனைக் கண்டவுடன் மனத்தில் கோபம் பொங்கியெழ, ''அடேய்



மித்யாமிச்ரா! எ ங்கள் இ ளவரசி காஞ்சனலதாவை எங்கே ஒளித்து வைத்திருக்கிறாய்?'' கத்தினான்.

சட்டென கண் விழித்துப் பார்த்த மித்யாமிச்ரர் காளிவர்மனைக் கண்டு திடுக்கிட்டான். பிறகு சமாளித்துக் கொண்டு ''நான்தான் மித்யாமிச்ரர் என்று தெரிந்து வைத்திருக்கிறாயே? அப்படியானால் என் சீடன் பிராந்தி மதியையும் உனக்குத் தெரியும் போல் இருக்கிறது,'' என்று சொல்லி மேலே பார்த்தான். அவன் பார்த்த திசையில் ஒரு மரத்தில் கிளைகளுக்கிடையே மாயக்குரங்கு அமர்ந்திருந்தது. காளிவர்மனைக் கண்டதும் 'கிறீச்' என்று கத்திக் கொண்டே ''குருவே! இவன்தான் காளிவர்மன்! நமது திட்டங்களுக்கு முதல் எதிரி இவனே! இவனை ஒழித்து விடுகிறேன்!'' என்று காளிவர்மன் மேல் பாய்ந்தது.

காளிவர்மன் தன் மீது பாயும் குரங்கினைத் தாக்க நிலத்தில் செருகப் பட்டிருந்த திரிசூலத்தை எடுத்துக் கொண்டு குரங்கினைத் தாக்க குறி பார்த்தான். குரங்கு விழுந்த வேகத்தில் தானாகவே திரிசூலத்தின் மீது விழ, அது ஆழமாகப் பாய்ந்ததால் குரங்கு தரையில் விழுந்து புரண்டது. இரத்த வெள்ளத்தில் மூழ்கிய மாயக்குரங்கு ''குருவே! இந்தப் பிறவியில் உங்களுக்குப் பணிபுரியும் பாக்கியத்தை நான் இழந்து விட்டேன். நான் இனிப் பிழைப்பது அரிது!'' என்று அரற்றியது.

மாயக்குரங்கின் மரணம் நெருங்கி விட்டதை உணர்ந்த காளிவர்மன் மித்யாமிச்ரரை நோக்கித் தன் வாளை உருவிக் கொண்டே, ''அற்பப்பதரே! உன்னுடைய இறுதிக்காலமும் நெருங்கி விட்டது. மரியாதையாக இளவசரசி இருக்குமிடத்தைச் சொல்!'' என்று ஊறுமினான்.

அப்போது மித்யாமிச்ரர் யாருக்கோ சைகை செய்தான். உடனேயாரோ ஒரு இளம்பெண்ணின் குரல் கேட்டது. ''வாலிபரே! பத்திரம்! உங்களைப் பின்புறமிருந்து ஒரு ராட்சசன் தாக்கப் போகிறான்,'' என்று அந்தக் குரல் எச்சரித்தது. திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்த காளிவர்மன் கண்களில் உக்கிரதண்டன் போல் தோற்றமளித்த ஒரு ராட்சசன் தன் கையில் ஏந்திய கதையும் அவன் மீது பாய்வதைக் கண்டான். உடனே வெகு விரைவாக காளிவர்மன் விலகிக் கொள்ள, அந்த ராட்சசன் பாய்ந்த வேகத்தில் கால் இடறி தரையில் வீழ்ந்தான். அவன்

கதை கையிலிருந்து நழுவி விழுந்தது.

தரையில் விழுந்த ராட்சசன் பயங்கரமாக உறுமிக் கொண்டே எழுந்தான். உடனே அவன் கை நழுவ விட்ட கதையை எடுத்துக் கொண்ட காளிவர்மன் கதையால் ராட்சசனின் தலையில் அடிக்க, அவன் மயங்கி விழுந்தான்.

அடுத்தடுத்து நடந்த இந்த நிகழ்ச்சிகளால் அதிர்ச்சி அடைந்த மித்யாமிச்ரர் வேறு வழியின்றி தன்னைக் காத்துக் கொள்ள தண்ணீரில் அமிழ்ந்து கொண்டான். தன்னை தக்க சமயத்தில் காப்பாற்றிய மங்கையின் மீது காளிவர்மன் தன் கவனத்தைச் செலுத்தினான். ' 'ஓகோ! சூ ரிய பூபதியின் புதல்வி காஞ்சனலதா நீதானா! உன்னை அபகரித்து ஓட முயற்சி செய்தது இந்தக் கயவன் தானே!'' என் று க ாளிவர்மன் அவளைக் கேட்க, அவள் புன்னகை யுடன் தலையசைத்தாள்.

''மித்யாமிச்ரரின் ஆட்கள் இருவரையும் நீங்கள் வீழ்த்தி விட்டீர்கள். ஆனால் அவர்களுடைய குருவை தப்ப விடாதீர்கள்! உங்கள் கையில் உள்ள வாளை என்னிடம் கொடுங்கள் நீங்கள் அந்த கதையை எடுத்துக் கொள்ளுங்கள் நாமிருவரும் சேர்ந்து ஏரியில் அமிழ்ந்திருக்கும் அந்த நய வஞ்சகனைக் கொன்று விடுவோம்!'' என்றாள் இளவரசி.

அதன்படியே காளிவர்மன் தனது வாளை அவளிடம் கொடுத்துவிட்டு கதையை தான் எடுத்துக் கொண்டான். அவளைப் பின் தொடர்ந்து வருமாறு



கூறிவிட்டு காளிவர்மன் கதையுடன் ஏரியில் இறங்கினான். அப்போது ''நில்! நில்! காளிவர்மா! அந்த ஏரியில் இறங்காதே!'' என்ற குரல் கேட்டு இருவரும் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தனர். ஏரிக்கரையில் மன்னர் ஜிதகேதுவும், அவருடைய இரு வீரர்களும் நின்று கொண்டிருந்தனர்.

''அந்த ஏரியில் முதலைகள் உள்ளன. உடனேகரையேறு!'' என்று உத்தரவிட்ட மன்னர் காளிவர்மன் கரை ஏறியதும் ''காளிவர்மா! இளவரசியை நீ மீட்டது குறித்து மிக்க மகிழ்ச்சி. இ வளை எ ன் சு வீகார மகளாக ஏற்கெனவே அறிவித்து விட்டேன். அவள் மனமுவந்து தனக்குப் பிடித்தவனைத் திருமணம் செய்து கொள்ளவும் நான் அனுமதிக் கிறேன்! காஞ்சனலதா! காளிவர்மனை மணந்து கொள்ள உனக்கு சம்மதம் தானே? சொல்!'' என்றார்.

தனது சம்மதத்தை மௌனத்தின் மூலம் அறிவித்தாள். அதற்குள் சூரிய பூபதி, மாய மந்திரவாதி, உக்கிர தண்டன் ஆகியோர் அந்த இடத்தை வந்தடைந்தனர். தனது மகளைக் கண்ட பூபதி ஓடிச்சென்று அவள் கரங்களை மகிழ்ச்சியுடன் பற்றிக் கொண்டான். பிறகு காளிவர்மனை நோக்கி ''என் மகளை பத்திரமாக மீட்ட மகா வீரனான உனக்கு என் மனமார்ந்த நன்றி'' என்றான். ஜிதகேது மன்னர் காளிவர்மனுடைய கையைப் பிடித்தழைத்து காஞ்சன லதாவிடம் சென்று ''என் சுவீகார மகளை மகாவீரனான காளிவர் மனுக்குத் திருமணம் செய்து கொடுப்பதாக முடிவு செய்துள்ளேன். எனக்குப் பிறகு காளிவர்மன் இந்த ராஜ்ஜியத்திற்கு வாரிசு ஆவான்!'' என்று அறிவித்தார்.

அந்த சமயம் ஒரு பயங்கர ஒலி கேட்டது. அனைவரும் திடுக்கிட்டுப் பார்த்தனர். மித்யாமிச்ரரை ஒரு முதலை தன் வாயில் கவ்விக் கொண்டு ஏரிக்கரையில் மறைந்தது. அவன் எழுப்பிய ஒலியும் சற்று நேரத்தில் அடங்கியது. அதற்குள் ஏரிக்கரையில் விழுந்திருந்த ராட்சச உருவத்தின் மயக்கத்தைப் போக்கி, உணர்வு வரச் செய்தான் உக்கிரதண்டன். மயக்கம் தெளிந்து எழுந்த ராட்சசன் ''தம்பி!'' என்று கூறி உக்கிரதண்டனைத் தழுவிக் கொள்ள ''அண்ணா! உன்னை அடிமையாகவும் ஊமையாகவும் ஆக்கி சித்திரவதை செய்த மித்யா மிச்ரர் முதலைக்கு உணவானான். இன்று முதல் உனக்கு விடுதலை!'' என்று உக்கிரதண்டன் மகிழ்ச்சியில் கூச்சலிட்டான்.

பிறகு காளிவர்மனை நோக்கிய காலதண்டன், ''என்னைப் போன்ற பலசாலியுடனே மோதத் துணிந்த வீரனே! உன்னைப் பாராட்டுகிறேன். உன் மூலம் தான் எனக்கு விடிவுகாலம் ஏற்பட்டது!'' என்று ஒரு தோளில் காளிவர்மனையும் மறுதோளில் இளவரசியையும் சுமந்து கொண்டு ஆனந்தக் கூத்தாடினான். கூடியிருந்த அனைவரும் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்தனர். (முற்றும்)





நவீன வேதாளக் கதை

# திறமையான ஆலோசகர்

**த**ன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மரத்திலேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அவன் கீழேயிறங்கி அதைத் தூக்கிக் கொண்டு மயானத்தை நோக்கி செல்லுகையில், அதனுள் இருந்த வேதாளம் சிரித்துக் கொண்டே, ''மன்னா, சில உன்னதமான லட்சியங்களுக்காக நீ இவ்வாறு கடும் முயற்சியை மேற்கொண்டிருக்கிறாய். உன்னைப் போலவே சுசேனன் என்ற மன்னனும் உயர்ந்த லட்சியங்களைக் கொண்டு இருந்தான். ஆனால் தன்னுடைய லட்சியங்களை அடையவும் குடிமக்களுடைய பிரச்சினைகளைத் தீர்க்கவும்



அவன் கையாண்ட வழிமுறைகள் வினோதமானவை. அவனைப்பற்றிய கதையைச் சொல்கிறேன், கேள்'' என்று கதை சொல்ல ஆரம்பித்தது.

புஷ்பக நாட்டை ஆண்டு வந்த சுசேனர் தனது குடிமக்களின் பிரச்சினைகளை வேறு சிலரிடம் விளக்கிக் கூறி, அவர்களிடமே ஆலோசனை கேட்பார். அவற்றுள் சரியெனத் தோன்றும் ஆலோசனைகளைச் செயற்படுத்தி, குறைகளைத் தீர்த்துவைப்பார். திருப்திகரமாக ஆலோசனை கூறுபவர்களுக்கு சுசேனர் பரிசு அளித்து கௌரவிப்பது உண்டு. சில சமயங்களில் தன் பிரச்சினைகளுக்குக் கூட பொதுமக்கள் சிலரிடமிருந்து இதுபோல் ஆலோசனை கேட்பார்.

ஒரு சமயம் சுசேனரது தாயின் உடல் நலம் பாதிக்கப்பட்டு, படுத்த படுக்கையானார். சுசேனரின் பட்டத்து ராணியான நந்தினிக்கு தன் மாமியாருக்குப் பணிவிடை செய்ய விருப்பமில்லாமல் உடல் நலம் குன்றிவிட்டது என்று பாசாங்கு செய்து படுக்கையிலேயே கிடந்தாள். அரண்மனை மருத்துவரான புண்ணியகோடிக்கு பட்டத்து ராணி நந்தினிக்கு உண்மையிலேயே நோய் ஒன்றுமில்லை என்பது புரிந்து விட்டது. ஆனாலும் அதை வெளியே காட்டிக் கொள்ளாமல் இருந்தார். விரைவிலேயே மன்னரின் தாய்க்கு குணமாகி விட்டது. இருப்பினும் முற்றிலுமாக சரியாகாததால் மன்னரிடம் அவர் தாயை மலைப்பிரதேசத்திற்கு அனுப்பி அங்கு ஓய்வெடுக்குமாறு அறிவுரை தந்தார்.

அதேபோல் மன்னரின் தாய் மட்டும், பல பணியாளர்கள் பின் தொடர, ஒரு மலைப்பிரதேசத்திற்கு அனுப்பப் பட்டார். ஆனால் நந்தினிக்கு நீண்ட நாள்களாகியும் உடல் நிலை சரியாகாததால் மன்னர் மருத்துவரிடம் தன் மனைவியின் நோய்க்கான காரணத்தைக் கேட்க அதற்கு மருத்துவர், ''அரசே! பட்டத்து ராணிக்கு அவர் மனத்தில்தான் பிரச்சினை உள்ளது என்று நினைக்கிறேன். ஆகையால் அவரை நீங்கள் மகிழ்ச்சியாக வைத்திருக்கும் படி ஏதேனும் வேலை செய்யுங்கள்'' என்றார்.

இதை மன்னர் நந்தினியிடம் கேட்டதும் அவள் கோபத்துடன் ''புண்ணியகோடி எனக்கு மனோவியாதி என்று கூறுகிறானா? அவனை

பதவியில் இருந்து விலக்கி விட்டு அதில் வேறு யாரையாவது அமர்த்துங்கள். அப்பொழுது தான் எனக்கு மகிழ்ச்சியாக இருக்கும்'' என்றாள்.

ஆனால் புண்ணியகோடி மிகச் சிறந்த மருத்துவர் என்பது மன்னருக்குத் தெரியும். பிறகு உண்மை என்ன என்பதை புண்ணியகோடியிடம் இருந்து ரகசியமாகக் கேட்டறிந்தார். அதற்குள் மலைப்பிரதேசத்திலிருந்து பூரண குணமடைந்து திரும்பிய மன்னருடைய தாயார் மன்னரிடம் புண்ணியகோடியை வானளாவப் புகழ்ந்து அவரை அரண்மனையிலேயே வைத்துக் கொள்ள வேண்டுமென்று கூறினாள்.

புண்ணியகோடியை பதவியில் இருந்து நீக்கினால் தாய் கோபம் அடைவாள். நீக்காவிட்டால் மனைவி கோபம் அடைவாள். அதற்கு என்ன உபாயம் என்று நெடு நேரம் யோசித்தும் மன்னரால் தீர்வு காண முடியவில்லை.

தனது வழக்கப்படி மாறு வேடமணிந்து மன்னர் குடிமக்களை சந்தித்துப் பேசுகையில் ஒருநாள் தினகரன் என்ற வியாபாரியை சந்தித்து தன் பிரச்சினையைக் கூறினார். சிறிது நேரம் யோசித்து விட்டு ''இது போன்ற பிரச்சினைகள் வரும்பொழுது பொய் சொல்லுபவனை நன்கு உபசரிக்க வேண்டும் அல்லது அவரை தான் உபசரிக்கிறோம் என்பது போன்ற நம்பிக்கையாவது கொடுக்க வேண்டும்'' என்றான்.



மறுநாள் சுசேனர் நந்தினியிடம் ''நம் அரசாங்க மருத்துவரைக் கண்காணித்ததில் அவர் உன் மீது மிகவும் மரியாதை வைத்திருக்கிறார் என்று தெரிய வந்துள்ளது. நீ உனது மாமியாருக்கு பணிவிடை செய்வதில் அவருக்கு விருப்பமில்லையாம். அதனால்தான் என் தாயாரை மலைப்பிரதேசத்திற்கு அனுப்பி விட்டாராம்'' என்றார். உடனே மிகவும் மகிழ்ச்சியடைந்த நந்தினி, ''அடடா! புண்ணியகோடி இவ்வளவு நல்ல மருத்துவரா? நான் தான் அவரைத் தவறாக எண்ணிவிட்டேன். அவரைப் பதவியிலிருந்து நீக்க வேண்டாம்'' என்றாள்.

தினகரனுடைய யோசனை நன்கு பயன்பட்டதை எண்ணி மகிழ்ந்த மன்னர் மீண்டும் மாறுவேடத்தில் அவரை அணுகி, ''ஐயா! உங்கள்



யோசனை பலித்து விட்டது. உங்களுக்கு நான் நன்றிக்கடன் பட்டு உள்ளேன். எனக்கு மன்னரிடம் செல்வாக்கு உண்டு. அவரிடம் பிரதம ஆலோசகராக உங்களை வேலைக்கு அமர்த்தி விடுகிறேன்,'' என்றார்.

அதற்கு தினகரன், ''எனக்கு அந்த வேலை வேண்டாம். நான் லட்சுமி புரம் கிராமத்திற்குச் சென்று அமைதி யாக வாழ விரும்புகிறேன். அந்த கிராம அதிகாரிக்கு இரண்டு சொந்த வீடுகள் உள்ளன. ஒன்றில் அவர் வசிக்க, மற்றது காலியாக உள்ளது. ஆனால் அந்த வீட்டை அவர் எனக்கு விற்கவோ, வாடகைக்கோ தர மறுக்கிறார். அரசரிடம் உங்களுக் குள்ள செல்வாக்கைப் பயன்படுத்தி, கிராம அ திகாரி க ாலி வீ ட்டை எனக்குத் தரும்படி செய்யுங்கள். அது ஒன்றே போதும்!'' என்றார்.

''இவ்வளவுதானே! நாளைக்கே என்னுடன் அந்தக் கிராமத்திற்கு வாருங்கள். அவரிடமிருந்து வீட்டை வாங்கித் தருகிறேன்!'' என்று மறுநாள் கிராம அதிகாரியிடமிருந்து நியாய மான விலைக்கு வீட்டை வாங்கியும் தந்தார்.

கிராம அதிகாரி வசித்த வீட்டிற்கும், தினகரன் வாங்கியவீட்டிற்கும் நடுவில் காலியிடம் இருந்தது. கிராம அதிகாரியின் வீட்டார் குப்பைக் கூளங்களை அந்த இடத்தில் வீசி எறிந்து அசுத்தப் படுத்தி வந்தனர். அது பிடிக்காத தினகரன் ஒருநாள் அதிகாரியிடம் இவ்வாறு செய்ய வேண்டாம் என்று கூறியும் அதிகாரி அதைப் பொருட்படுத்தவில்லை.

அதனால் கோபமடைந்த தினகரன் ஒருநாள் அந்த இடத்தை சு த்தம் செய்து, நாற்புறமும் வேலியிட்டு, உள்ளே தோட்டம் போட்டு பூச் செடிகளை வளர்த்து, அதை ஒரு பூங்காவாக மாற்றினார். அதற்கு ஒரு தோட்டக்காரனையும் நியமித்தார். கிராம மக்களுக்கு பூஜைக்காக வேண்டி பூக்களை இலவசமாக வழங்க ஏற்பாடு செய்தார். இதனால் தினகரன் மீது லட்சுமிபுர மக்களுக்கு மதிப்பும் மரியாதையும் ஏற்பட்டது. இதைக் கண்ட கிராம அதிகாரி பொது இடத்தை தன் அனுமதியில்லாமல் ஆக்கிரமித்தது குற்றம் என்று தினகரன் மீது குற்றம் சாட்டினான். இந்த செய்தி மன்னரையும் எட்டியது.

அதிகாரி மீது நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டு



இருக்கையில் அரசகுடும்பத்திற்கு அணிகலன்கள் செய்யும் பலராமன் என்ற வியாபாரியின் வழக்கு வந்தது. பலராமனின் பெற்றோர் அவன் வசிக்கும் அதே தெருவில் தனியாக வசித்து வந்தனர். அவர்களுடைய வீட்டில் ஒரு முத்துமாலையும் பலராமனின் மனைவியின் பவள மாலையும் ஒரே சமயத்தில் காணாமற் போயிற்று. சில நாள்களுக்குப் பிறகு பலராமன் மனைவியின் பவள மாலை, அவன் தாயின் வேலைக்காரி கங்காவின் வீட்டில் அகப்பட்டது. தாயின் முத்துமாலை பலராமன் வீட்டின் வேலைக்காரி யமுனாவின் வீட்டில் அகப்பட்டது. தன்னுடைய வேலைக்காரி குற்றமற்றவள் என்றும் மற்றொரு வேலைக்காரிதான் திருடியிருக்க வேண்டுமென்றும் மாமியார் ம ருமகள் இ ருவரும் சண்டை பி டித்தனர். ம ன்னரிடம் பலராமன் தன் சங்கடத்தை எடுத்து உரைத்ததும் அவர், ''லட்சுமிபுரம் கிராமத்தில் தினகரன் என்று ஒரு மேதாவியும் கிராமத்து அதிகாரியும் இருக்கிறார்கள். உன்னுடைய பிரச்சினையை இருவரிடமும் கூறு. யார் உனக்குத் திருப்திகரமான பதிலைத் தருகிறார்களோ, அவரே இனிமேல் கி ராம அதிகாரியாக இருப்பார். பொது இடத்தைக் குறித்தும் அவரே முடிவு எடுக்கட்டும்! என் பெயரில் நீ கட்டளையிட என் முத்திரையிட்ட ஓலையை உன்னிடம் தருகிறேன்!'' என்றார். பலராமனும் அதன்படியே லட்சுமிபுரம் சென்று தன் பிரச்சினையை இருவரிடமும் கூறினான். கிர ாம அ திகாரி ஒ ரு பதிலும் சொல்லத் தெரியாமல் விழித்தான். ஆனால் தினகரனோ, ''உன் மனைவியிடம் அவளுடைய மாமியாரின் வேலைக்காரிக்கு என்ன தண்டனை அளிக்க வேண்டும் என்று கேள். அதேபோல் உன் தாயிடம் அவளுடைய மருமகளின் வேலைக்காரிக்கு என்ன தண்டனை அளிக்க வேண்டும் என்று கேள். பிரச்சினைதானாகவே தீர்ந்து விடும்'' என்றார்.

''ஆகா! என்ன அற்புதமான யோசனை!'' என்று பாராட்டிய பலராமன், ''ஐயா! தினகரன் அவர்களே! உங்கள் சமயோசித்த புத்தியை மிகவும் பாராட்டுகிறேன். மன்னரின் பெயரில், உங்களையே இனிமேல் இந்தக் கிராமத்திற்கு அதிகாரியாக

ஆக்குகிறேன். இந்த பொது இடத்தைப் பற்றியும் நீங்களே முடிவு செய்யுங்கள்!'' என்று கூறி மன்னர் தனக்கு அளித்திருந்த முத்திரை பதித்த ஓலையில் தினகரனின் பெயரைப் பொறித்து தினகரனை அப்போதே அதிகாரியாக நியமனம் செய்தான்.

இந்த இடத்தில் கதையை நிறுத்திய வேதாளம் மன்னனை நோக்கி, ''மன்னா! சுசேனர் ஒவ்வொரு முறையும் ஒரு பிரச்சினையை தீர்வு காண்பதற்கு ஏதேனும் வழி கண்டு கொள்கிறான். இது அவனுடைய இயலாமையைக் காண்பிக்க வில்லையா? அதேபோல் கிராம அதிகாரியை அவனுடைய பதவி யிலிருந்து விலக்கி அந்தப் பத வியில் தினகரனை மன்னரே அமர்த்தி இருக்கலாம். ஆனால் அவன் ஏன் அவ்வாறு செய்யவில்லை? என் சந்தேகத்திற்கு விடை தெரிந்திருந்தும் நீ மௌனமாக இருந்தால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகிவிடும்'' என்றது.

அதற்கு விக்கிரமன், ''மன்னர் தினகரனிடம் தான் யார் என்று காட்டிக் கொள்ளாமல் தன் பிரச்சி னைக்குத் தீர்வு கண்டு கொண்டார். இராஜ பரம்பரையின் மரியாதையை அவர் நன்கு காத்துக் கொண்டார். புதிய கிராம அதிகாரியை நியமிக்கும் விஷயத்தில் ஒரு நல்ல மனிதனுக்கு அந்தப் பதவியைக் கொடுக்க வேண்டும் என்ற எண்ணத்தில் பலராமனை லட்சுமிபுரத்திற்கு அனுப்பினார். சுசேன மன்னரின் அரசாளும் விதத்தை சிறிது கூர்ந்து கவனித்தால் அவர் தன் நண்பர்களுக்கு எந்தப் பதவியையும் அளிப்ப தில்லை, அதேபோல் அரச பதவியில் இருப்பவரிடமும் நட்புடன் இருப்ப தில்லை என்பதைத் தெரிந்து கொள்ளலாம். ஏனென்றால் நாடாளுவது என்பது பரந்து கிடக் கின்ற பூமியைப் போன்றது. சுசேனர் ஒரு திறமைமிக்க அரசர் என்பதில் ஐயமில்லை'' என்றான்.

விக்கரமனது சரியான பதிலால் அவன் மௌனம் கலையவே, வேதாளம் அவன் சுமந்து வந்த உடலுடன் மீண்டும் பறந்து சென்று முருங்கை மரத்தில் ஏறிக் கொண்டது.






# மழையும், மூங்கில்களும்

இந்தியாவின் வடகிழக்குப் பகுதியிலுள்ளது மிசோராம். இங்குள்ள மொழியில் மி என்றால் மனிதன், சோ என்றால் மலை, ராம் என்றால் நாடு. மனிதர்கள் வாழும் மலைகள் அடர்ந்த பகுதி என்று பொருள் கொள்ளலாம். இங்கு வசிப்பவர்கள் சுமார் 300 ஆண்டுகளுக்கு முன் பர்மாவிலிருந்து வந்த மங்கோலிய இனத்தைச் சேர்ந்தவர்கள். மலைகளும், காடுகளுமடர்ந்த அந்தப் பகுதிக்குள் கிறிஸ்துவ மதப் பிரசாரகர்கள் சென்று அங்குள்ள மக்களை கிறிஸ்தவர்களாக மாற்றினர். இன்றும் கூட மக்கள் தொகையில் 95 சதவீதம் கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்தவர்களே! மிசோராம் மாநில மக்கள் ஆங்கிலத்தில் எழுதுவதிலும் படிப்பதிலும் மட்டுமல்லாமல் பேசவும் தேர்ச்சிப் பெற்றவர்கள். அவர்களுடைய மொழி ஆங்கிலத்தில்தான் எழுதப் படுகிறது.



மிசோராம் பகுதியில் ஆண்டுக்கு ஒன்பது மாதங்கள் தொடர்ந்து மழை பெய்கிறது. இவை மூங்கில்கள் நன்கு வளர உதவுகின்றன. வயலில் விளையும் அரிசியைக் கூட மூங்கில் குழாயில்தான் சேர்த்து வைக்கின்றனர் அடர்ந்து வளர்ந்துள்ளன. விவசாயத்தை நம்பி வாழும் மிசோராம் மக்களுடைய திருவிழாக்களும், பண்டிகைகளும் விவசாயத்தைச் சார்ந்தே உள்ளன. சப்சார் குட், மிம் குட், பவ்ல் குட் போன்றவை முக்கியப் பண்டிகைகள்.

மூங்கில் நடனம் மிசோராம் மாநிலத்தில் மிகப் பிரபலமானது. மூங்கில்களைக் கொண்டு ஆடும் நடனத்தில் ஆடுபவர்கள் எச்சரிக்கையாக ஆடாவிடில் அடிபடுவதற்கு வாய்ப்புகள் உண்டு.

# மன்னர் கற்றுக் கொண்ட பாடம்

தனது இரண்டாவது மகனைப் பற்றிய கவலையில் மன்னர் ஆழ்ந்திருந்தார். அவருக்கு இரண்டு மகன்கள் உண்டு. குழந்தைச் செல்வம் இல்லாத அவருடைய மைத்துனர், இரண்டாவது மகனை தத்து எடுத்துக் கொண்டார். பத்து ஆண்டுகளுக்குப் பின், ஒருநாள், மன்னருடைய மூத்த மகன் இளம் வயதிலேயே அரண் மனையை விட்டுச் சென்று சாமியார் களுடன் சேர்ந்து கொண்டான்.



அதற்குள் மன்னருடைய மைத்து னருக்கு ஒரு குழந்தை உண்டாக தத்து எடுத்துக் கொண்ட இளவரசனை அவர் திருப்பி அனுப்பி விட்டார்.

திரும்பி வந்த நாள் முதல் இரண்டாவது பிள்ளை எப்போதும் எரிச்சலுடன் இருந்தான். சுவீகாரம் என்ற பெயரில் தான் பிறந்து வளர்ந்த வீட்டை விட்டு வெளியேறிப் பிறகு அங்கு தேவையில்லாமல் போய் மீண்டும் தான் பிறந்த இடத்திற்கே திரும்பி வந்தது மனோரீதியாக அவனை மிகவும் பாதித்திருந்தது. ஆகையால் எப்போதும் சிடுசிடுப் பாக இருந்தான். படிப்பிலும் அவன் மனம் பதி யவில்லை. ம ன்னரும் அவனுக்காக எவ்வளவோ ஆசிரியர் களை அமர்த்தி கல்வி கற்பிக்க முயற்சி செய்தும் பயன் இல்லை.

ஒருநாள் மன்னருடைய மந்திரி, ''ராஜா, அவனுக்கு யாரோ செய்வினைவைத்து இருக்கிறார்கள் என்று தோன்று கிறது. நீங்கள் நதிக் கரையில் வசிக்கும் யோகியை சந்தித்து உங்கள் பிரச்சினையைக் கூறுங்கள்,'' என்று அறிவுரை தந்தார்.

அது சரியான யோசனையாகத் தோன்றவே, மன்னர் ஒருநாள் தனியாக அந்த யோகியைக் காணச் சென்றார். அவரை வணங்கிவிட்டு



அவர் முன்னே பணிவுடன் அமர்ந்தார். மன்னரைக் கண்ட யோகியின் விழிகள் வியப்பினால் மலர்ந்தன.

''புவியாளும் மன்னர் இந்த ஏழைத் துறவியை நாடி வந்ததன் காரணம் என்னவோ?'' என்று வினவினார். ''சுவாமி! மன்னனுக்கும் சொந்த வாழ்க்கையில் பல பிரச்சினைகள் ஏற்படுவதுண்டு'' என்று தன்னுடைய மகனைப் பற்றி விளக்கினார்.

நீண்ட நேரம் யோசித்த யோகி இறுதியில் ''உன்னால் உன் மகனை மாற்ற முடியும். ஒரு புலி விழித்திருக்கும் போதே, அதனுடைய வாய் அருகேயுள்ள முடியிலிருந்து சிறிதளவு கத்தரித்து எடுத்து வா! அதை நீயே செய்ய வேண்டும்!'' என்றார்.

''என்ன சொன்னீர்கள்? விழித்திருக்கும் புலியிடமிருந்தா? இது எப்படி முடியும்?'' என்று மன்னர் கேட்க யோகி பதிலேதும் சொல்லாமல் எழுந்து விட்டார். மிகுந்த மனக் குழப்பத்துடன் மன்னர் அரண்மனைக்குத் திரும்பினார்.

மன்னருடைய நந்தவனத்தில் கூண்டிற்குள் அடைக்கப்பட்ட ஒரு புலி இருந்தது. புலிக்கு உணவிடும் காவலனை மன்னர் அழைத்து புலியைத் தொட முடியுமா என்று கேட்டார்.

''ஐயோ! அது மிகவும் ஆபத்து மகாராஜா! நானே அதற்கு வேண்டிய உணவை தொலைவில் நின்று கொண்டே, கூண்டின் கம்பிகளின் இடைவெளி வழியே தூக்கி எறிவேன்'' என்றான் அவன். ஆனால் யோகி கூறியதைத் தான் செய்து பார்க்கத்தான் வேண்டும் என்று மன்னருக்குத் தோன்றியது. அன்று முதல் புலிக்கு உணவிடும் பொறுப்பை தானே ஏற்றுக் கொண்டார். முதல் நாள் தட்டில் இறைச்சியை எடுத்துச் சென்ற மன்னர் கூண்டிற்குள் அதைத் தள்ளி விட புலி பயங்கர உறுமலுடன் பாய்ந்து வந்து அதைத் தின்றது. இவ்வாறு சுமார் இரண்டு வாரம் தானே உணவளித்த பிறகு, ஒருநாள் மன்னர் தட்டை தன் கையிலேயே வைத்துக் கொண்டு புலியிடம் நீட்டினார். புலி ஓடி வந்து கூண்டிற்கு அருகே நின்று, தட்டில் இருந்த இறைச்சியைத் தின்றது. ஆனால் மன்னரை புலி ஒன்றுமே செய்யவில்லை. இந்த இரண்டு வாரங்களில் புலிக்கு மன்னரிடம் ஓரளவு பழகி விட்டது.

ஒருநாள் உணவு உண்டபின், புலி மன்னரின் கை விரல்களை அன்புடன் நக்கியது. புலிக்குத் தன்னிடம் பிரியம் உண்டாகி விட்டது என்று மன்னருக்குப் புரிந்து விட்டது. ஒருநாள் துணிச்சலாக மன்னர் தன் கையினால் புலியின் தலையை அன்புடன் தடவிக் கொடுக்க, புலி வளர்ப்பு நாயைப் போல் மன்னரிடம் தோழமை பூண்டது. ஒருநாள் மன்னர் அதன் தலையை அன்புடன் தடவிக் கொடுக்க, புலி அதற்குக் கட்டுப்பட்டு அசையாமல் நின்றது. இவ்வாறு ஒரு மாதம் நடக்க, ஒருநாள் மன்னர் அதன் தலையை அன்புடன் தடவிக் கொடுத்தபடி, கத்தரிக்கோலால் அதன் முடியை சிறிது கத்தரித்து எடுத்து விட்டார். புலி ஒன்றுமே செய்யாமல் சும்மாயிருந்தது.

மன்னர் மிகுந்த உற்சாகத்துடன் யோகியிடம் சென்று முடியை கொடுத்தார். ஆனால் யோகியின் செய்கை வியப்பை அளித்தது. அந்த முடியை ஓம குண்டத்தில் போட்டு விட்டு சிரித்தார் அந்த யோகி.

''மன்னா! மிகவும் கொடூரமான புலியிடமிருந்தே உன்னால் இதை சாதிக்க முடிந்தது எனில், அதே அன்பினாலும், பொறுமையினாலும் உன் மகனை ஏன் உன்னால் மாற்ற முடியாது? உன் மகன் புலியைப் போல் கொடூரமானவன் அல்லன். அவனுக்கு ஒரு ஆசிரியரை நியமிக்கு முன், அவனுடன் நன்றாகப் பழகு. அன்பினால் முடியாதது எதுவும் இல்லை. வறண்ட பாலைவனம் போல் உள்ள உன் மகனின் இதயம், உன் அன்பினால் பசுமையாக மாறும். பிறகு அவனுக்கு ஆசிரியரை நியமி'' என்று அனுப்பி வைத்தார்.

யோகி கூறியபடி தன் மகனிடம் அன்புடன் நடந்து கொள்ளத் தொடங்கியதும், இளவரசன் சகஜ நிலைக்குத் திரும்பினான். ''முதலில் நான் நன்கு பாடம் கற்றுக் கொண்டேன். அதன் பிறகே என் மகனுக்கு என்னால் பாடம் கற்பிக்க முடிந்தது!'' என்று மகிழ்ச்சியுடன் மன்னன் அரசபை மந்திரிகளிடம் கூறினான். வெகு விரைவிலேயே இளவரசன் சகஜ நிலைக்கு திரும்பி தன் பாடங்களைப் பயிலத் தொடங்கினான்.



# இப்படியும் ஒருத்தி இருப்பாளா!

**ந**டுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்த மாதவன் மிகவும் எளிமையானவன். ஆனால் அவன் மனைவி நீரஜா ஆடம்பரத்தில் விருப்பம் கொண்டவள். தனது நெருங்கிய உறவினர் வீட்டுத் திருமணத்திற்கு நீரஜா செல்ல விரும்பினாள். ஆனால் திருமணத்திற்கு அணிந்து செல்லும்படியான நகை எதுவும் அவளிடம் இல்லை. அப்போது பக்கத்து வீட்டுப் பெண்மணி சியாமளா தன் கழுத்தில் மிக அழகானச் சங்கிலி அணிந்திருப்பதை நீரஜா பார்த்து விட்டாள். உடனே சியாமளாவிடம் சென்று கெஞ்சிக் கூத்தாடி அந்தச் சங்கிலியை இரவலாக வாங்கிக் கொண்டாள். திருமணத்திற்குச் சென்று திரும்பியவுடன் தன் சங்கிலியைத் திருப்பிக் கொடுத்து விட வேண்டுமென்ற நிபந்தனையுடன், சியாமளா தன் சங்கிலியைத் தந்தாள்.

திருமணத்திற்கு இரவல் நகையை பெருமையுடன் அணிந்து சென்று அனைவர் கண்களிலும் படும்படி திரிந்த நீரஜா, திருமணம் முடிந்து திரும்பிய பிறகும் அதை சியாமளாவிக்குத் திருப்பிக் கொடுக்கவில்லை. சியாமளாவும் கேட்கவில்லை.

பத்து நாள்களுக்குப் பிறகு, ஒரு நாள் நீரஜா கோபத்துடன் சியாமளாவிடம் சென்று, ''உன்னைப் போல் ஒரு மோசக்காரியை நான் இதுவரை பார்த்ததில்லை. இப்படியும் ஒருத்தி இருப்பாளா என்று ஆச்சரியப்படுகிறேன். நீ கொடுத்த தங்கச் சங்கிலி அசல் தங்கமில்லை. போலித்தங்கத்தைக் கொடுத்து ஏமாற்றி விட்டாய்!'' என்று குற்றஞ்சாட்டினாள்.

''அது சுத்தத் தங்கம் என்று நான் உன்னிடம் எப்போது சொன்னேன்? நீயும் கேட்கவில்லை. நானும் சொல்லவில்லை. அதிருக்கட்டும், என்னுடைய நகை போலி என்று எப்படிக் கண்டுபிடித்தாய்?'' என்று சியாமளா கேட்டாள்.

''பணம் கொஞ்சம் தேவைப்பட்டது. உன் சங்கிலியை அடகு வைத்து பணம் கடன் வாங்கச் சென்ற போதுதான் உண்மை தெரிந்தது'' என்றாள் நீரஜா.

'இப்படியும் ஒருத்தி இருப்பாளா!' என்று திகைத்துப் போனாள் சியாமளா.

-அமுதா



# செய்திச்சுடர்



## உயரமான பலசாலி

பஞ்சாப் மாநிலத்தைச் சேர்ந்த 35 வயதான மனோஜ் குமார் சோப்ரா வசிப்பது பெங்களூரில்! அவர் முயற்சி செய்வது உலகிலேயே தான் பலசாலி என்று சாதனை படைப்பதை! ஆறு அடி ஐந்து அங்குல உயரம் கொண்ட, ஆஜானுபாகுவான இந்த மனிதர் இந்தியாவின் சிறந்த பலசாலி என்ற பட்டத்தை ஏற்கெனவே 2002ஆம் ஆண்டில் பெற்று விட்டார். 2004ஆம் ஆண்டில் ஆசியாவிலேயே சிறந்த பலசாலி என்றபட்டத்தையும் பெற்று விட்டார். இப்போது உலக அளவில் சாதனை படைக்கத் துடித்துக் கொண்டிருக்கிறார். இதுவரை தன் பலத்தால் அவர் தொலைபேசி எண்கள் கொண்ட அட்டவணைப் புத்தகத்தைக் கிழித்தல், உலோகத் தகடுகளை பிய்த்தல், கண்ணாடிக் குடுவைகளை வாயினால் ஊதியே உடைத்தல் ஆகிய சாதனைகளை நிகழ்த்தியுள்ளார். குழந்தைகளுக்கு பலூன்கள் கொடுத்து அவர்களை அவர்முன் ஊதச் செய்வதுண்டு. பலூன்கள் விரிவடைந்து மிருகங்கள், பறவைகளின் வடிவங்கள் உண்டாவதைக் கண்டு குழந்தைகள் மகிழ்வார்கள்.

## மக்கள் தொகை அதிகமுள்ள நகரங்கள்




உலகிலுள்ள மக்கள் தொகை மிக அதிகமுள்ள பத்து நகரங்களில் மூன்று இந்தியாவில் உள்ளன. அவை முறையே மும்பை (1.83கோடி), தில்லி (1.53 கோடி), கொல்கத்தா (1.43 கோடி) ஆகும். உலகிலேயே ம க்கள்தொகை மி கவும் அதிகமுள்ள நகரம் ஜப்பான் நாட்டு தலைநகரான டோக்கியோ (3.53 கோடி) அதற்கு அடுத்து வருவன மெக்சிகோ 1.92 கோடி), நியூயார்க் (1.85). உலக மக்கள் தொகையில் பாதிப் பேர் அதாவது 325 கோடி மக்கள் நகரங்களில் வசிக்கிறார்கள். 2007ஆம் ஆண்டுக்குள் இது 500 கோடியாக உயரும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

இது வரை நடந்த கதை : மற்ற பிரபஞ்சங்களில் இருக்கும் ஜீ-மேனை தேடிப்பிடித்து தன் பக்கம் சேர்த்து டெர்ரோலீனை எதிர்த்துப் போராடும் பணியில் ஈடுபட்டுள்ள ஜீ-மேன் ஒரு தீயகுணம் படைத்த ஜீ-மேனை - ஆன்ட்டி-ஜீயை சந்திக்கிறான்.

ஹி... ஹி... ஹி... ஜீ-மேன் இன்னும் கொஞ்சம் பக்கத்துல வா.....

நம் இரண்டும் பேரும் முறையானபடி அறிமுகப்படுத்தப்படலை. நான் டெர்ரோலீனின் இரட்டை பிறவி. என் நண்பன் ஆன்ட்டி ஜீ இங்கே என் அண்ணனைக் கொன்ன போதிலும், நான் உயிரோட இருக்கற விஷயம் அவனுக்குத் தெரியாது.

ஆனா, நான் தப்பிச்சுட்டேன்.

எப்போதும் போல

முதல்ல நான் டெர்ரோலீனின் உடல்ல இருந்தேன். இப்போ, நான் சுதந்தரமா ஆயிட்டேன்.







இந்த தடவை புத்திசாலித்தனமா நடந்துக்காதே ஜீ-மேன்!?


இதுக்கான பதில் இதுதான், தெரிஞ்சுக்க..


இங்கேந்து தப்பிச்சுகிட்டு போயிடு. இது நீ போடக்கூடிய சண்டை இல்ல.
அப்படியா... அடி விழுந்தது! ஆனா அந்த ஆன்ட்டி-ஜீ மாதிரி ஏன் நீ அடிக்கறதில்ல?


ஆன்ட்டி-ஜீ, உனக்கும், எனக்கும் இடையிலே தான் இத செஞ்சாகணும்... ஆனா, உண்மை என்னனா எனக்கு உன் உதவி தேவை.


நீ என்னோட தனியாக சண்டை போடணும்னு இருந்தா உனக்கு உதவி தேவைதான்.




நமக்குள்ள பேச்சு வார்த்தை நடக்கணும்.
ஓகே.. நான் ஒத்துக்கறேன். உனக்கு சண்டை போடணும்னு இருக்கா. நீ தோத்து போனா நான் சொல்றபடி நடக்கணும், தெரிஞ்சுதா?


நீ ஜெயிச்சேன்னா, உனக்கு எப்படி தோணுதோ அந்த மாதிரி என்ன நடத்து!...


ஆஹா! சண்டையா?


வாயை மூடு!

சரி,
ஒத்துகிட்டேன்...
இப்போ, நீ தயாரா இரு...
நான் கொடுக்கறத
நல்லா வாங்கிக்க..

இவனுக்கு
பலமில்ல...
கொஞ்சம் ட்ரெயினிங்
கொடுக்கணும்
போலிருக்கு...






இது போதுமில்ல
ஆன்ட்டி-ஜீ...
இப்போதுக்கு...












நான் முயற்சி பண்ணி பாக்கிறேன் என்னால் செய்ய முடியுமான்னு... ஏன்னா, இங்கே என்னை எல்லோரும் வில்லனா நெனக்கிறாங்க
ஆமா... ஆமா... இப்போ நாம பேசலாமா? இது தான் என் மனசுல இருக்கு, இத நீ செஞ்சாகணும்...




ஹூம்... ரொம்ப பேராசை பிடிச்ச திட்டமா இருக்கே... யோசிச்சு பாத்தா இத செஞ்சு முடிக்கலாம்னு தோணுது... டெர்ரோலீனோட சண்டை போட்ட மாதிரி மறுபடியும் சண்டை போடலாமே... அவன் இல்லாம எனக்கு போரடிக்குது... இப்ப நான் ஜீ-மேன் பக்கம் சேந்துட்டேனே.
எனக்கும் வேற வழி இருக்கல... ஆனா உன்னோட துடுக்குத் தனத்தை நான் மெச்சறேன்...
நன்றி!


அப்ப, எப்ப ஆரம்பிக்கணும்? அத சொல்லு...

PARLE

# ஜீ-மேன் புதிர்

1. ஒரு உலகிலிருந்து மற்றொரு உலகிற்கு ஜீ-மேன் ஏன் செல்கிறான்?
அ. டெர்ரோலீனுடன் சண்டை போடுவதற்காக மற்ற ஜீ-மேனை தன்னுடன் சேர்த்துக் கொள்ள.
ஆ. அந்த பகுதியைச் சுற்றிப் பார்க்க.
இ. டெர்ரோலீனிடமிருந்து தப்பிக்க.

2. முதல் உலகில் ஜீ-மேன் சென்றடைந்ததும் அங்குள்ள மக்கள் ஏன் அத்தனை வருத்தத்துடன் காணப்பட்டனர்?
அ. அந்த மக்கள் டிவி பார்ப்பதை டெர்ரோலீன் தடுப்பதால்.
ஆ. நாள் முழுவதும் அந்த மக்கள் வேலை செய்வதை டெர்ரோலீன் கட்டாயப்படுத்துவதால்.
இ. அந்த உலகின் ஜீ-மேன் எங்கோ மறைந்து போனதால்.

3. இரண்டாம் உலகில் ஜீ-மேன் யாரை சந்திக்கிறான்?
அ. நீர் அரக்கனான குளுக்காவை
ஆ. ஆன்ட்டி-ஜீ
இ. மனதை அறியும் சக்தி படைத்த நியூரால்.

4. இரண்டாவது உலகிலுள்ள வில்லன் ஜீ-மேனை ஏன் மிக பயங்கரமாகத் தாக்க முடியவில்லை?
அ. தன் உடலிலிருந்த நல்ல பகுதி இறந்து போயி தன் அனைத்து சக்தியையும் அவன் இழந்து விடுவதால்.
ஆ. அவன் பலநாட்களாக சாப்பிடாமல் பலஹீனம் அடைந்ததால்.
இ. ஜீ-மேனை அவன் கொல்லக் கூடாது என்று டெர்ரோலீன் விரும்புவதால்.

5. இரண்டாவது உலகில் உள்ள வில்லன் யாருக்காக வேலை செய்கிறான்?
அ. டெர்ரோலீனின் தீய இரட்டையருக்காக
ஆ. டெர்ரோலீனுக்காக
இ. உலகிலுள்ள மக்களுக்காக

1-அ, 2-இ, 3-ஆ, 4-அ, 5-அ








டி-டவர் வரை சென்றடைய மற்றும் டெர்ரோலீனை எதிர்த்துப் போராட ஜீ-மேனுக்கு உதவி செய்யுங்கள்.










POWER SUPPLY



Visit: www.parleproducts.com

தமிழ்நாட்டின் நாட்டுப்புறக் கதை

# மலைச்சாமி தந்த அதிசயச் சங்கு

பழங்காலத்தில் பாண்டிய மன்னர் ஒருவர் ஆட்சிப் புரிந்தக்காலத்தில் மதுரையில் சாமி என்ற துப்புரவுத் தொழிலாளி இருந்து வந்தான். தினமும் பாண்டிய மன்னர் அதி காலையில் தன் மெய்க்காப்பாளர்கள் புடை சூழ தங்க ரதத்தில் சவாரி செய்து கொண்டு ராஜவீதி வழியாகக் கோயிலுக்குச் செல்லும் வழக்கம் இருந்தது. ராஜவீதியை மன்னர் வருவதற்குமுன் சுத்தம் செய்யும் பொறுப்பு சாமியுடையது. அன்றும் வழக்கப்படியே மன்னரும், அவர் முன்னே மெய்க்காப்பாளர்களும் ராஜவீதியில் வ ரும்போது ச ாமி மெய்க்காப்பாளர்களை உற்றுப் பார்த்தான். சிவப்பு நிற சீருடை அணிந்து தலையில் பட்டுத்துணி யினாலான தலைப்பாகையுடன் குதிரைமீது கம்பீரமாக அமர்ந்திருந்த அவர்களைக் கண்டதும், தானும் அதுபோல சீருடை அணிந்து குதிரைச் சவாரி செய்ய வேண்டுமென்ற ஆசை சாமிக்கு உண்டாயிற்று.



வீட்டிற்குச் சென்று மனைவியிடம் தன் ஆசையைத் தெரிவித்த சாமி, ''மீனா, அந்த அழகான குதிரைகளில் ஒன்றின் மீது அமர்ந்து, அவர்களைப் போல பளபளப்பான சீருடை அணிந்து நகர்வலம் வரவேண்டு மென்று ஆசையாயிருக்கிறது!'' என்றதும், அவன் மனைவி அதை லட்சியம் செய்யவில்லை.

''குதிரைச் சவாரி செய்கிற ஆளைப்பார்!'' என்று பரிகசித்தாள். பகற்கனவு கண்டு கொண்டிருந்த தன் கணவன் மீது எரிச்சலுற்ற மீனா, ''அடுத்த வேளை உணவிற்கு வழி இல்லாமல் திண்டாடும் உனக்கு ஏன்

இந்த வேண்டாத ஆசை? உருப் படியாக ஏதாவது யோசனை செய்! உன்னுடைய பைத்தியக்கார ஆசை களைக் கேட்க எனக்கு நேரம் இல்லை. உன் ஆசை நிறைவேற வேண்டுமானால், நமது ஊரின் எல்லையிலுள்ள மலைப்பகுதிக்குச் சென்று நம் குலதெய்வமான மலைச் சாமியை வேண்டிக்கொள்!'' என்று கூறிவிட்டுச் சென்று விட்டாள். உடனே தன் மனைவியிடம், ''மீனாட்சி, நீ சொன்னதுபோல் இன்று மலைச்சாமியிடம் வேண்டிக்கொண்டு வருகிறேன்,'' என்று சொல்லிவிட்டு வீட்டை விட்டு சாமி கிளம்பினான்.

நீண்ட நேரம் நடந்து மதுரையின் எல்லையைக் கடந்து, அங்கேயிருந்த மலைத்தொடர்களை அடைந்த சாமி, அங்கு தென்பட்ட ஓர் உயரமான சிகரத்தை நோக்கி மலை மீது ஏறத் தொடங்கினான். பாதி உயரம் சென்ற பிறகு, சாமி மிகவும் களைப்படைந் தான். அப்போது அங்கே ஒரு மலைக் குகைத் தென்பட்டது. குகைக்குள் சென்று ஓய்வெடுத்துக் கொண்ட சாமி சிறிது நேரத்திலேயே தன்னை மறந்து அயர்ந்து உறங்கி விட்டான்.



திடீரென ''சாமி! எழுந்திரு!'' என்று யாரோ அவனைக் கூப்பிடும் குரல் கேட்டது. திடுக்கிட்டு எழுந்த சாமி சுற்றுமுற்றும் பார்த்தான். ஒருவரையும் காணவில்லை. திடீரென அந்தக் குரல் மீண்டும் கேட்டது.

''சாமி! நீ தேடும் அந்த மலைச் சாமியான மலைவாணன் நான்தான்! குகைக்குள் ஒரு வெண்மையான சங்கு இருப்பதைப் பார் அது நான்உனக்குக் கொடுக்கும் பரிசு. அதை ஒவ்வொரு முறை ஊதும் போதும், நீ விரும்புவது கிடைக்கும்,'' என்று அசரீரியாகக் கேட்ட குரலைக் கேட்டு சாமி பரவச மானான். குகைக்குள் பார்த்தவனின் கண்களில் ஓர் அழகிய வெண்சங்கு புலப்பட்டது. அதை எடுத்து பத்திர மாகத் தன் தலைப்பாகையுடன் சேர்த்துக் கட்டிக் கொண்டு, குதூ கலத்துடன் வீட்டிற்குச் சென்றான்.

ஆனால் குகையிலிருந்து இறங்கி வந்து, மலைப்பிரதேசத்தை விட்டு மதுரையின் எல்லையை அடைவ தற்குள் இருட்டி விட்டது. சாலை ஓரத்தில் ஒரு சத்திரத்தைப் பார்த்த



சாமி, அன்றிரவு அங்கே தங்கிவிட முடிவு செய்தான். சத்திரத்தின் நிர்வாகி அவனுக்கு தங்க ஏற்பாடு செய்துவிட்டு, உணவு தயாரிக்கச் சென்றான். சத்திரக்காரனுக்குக் கொடுக்க சாமியிடம் பணமில்லை. தனக்குக் கிடைத்த அதிசயச் சங்கின் மூலம் பணத்தைப் பெற விரும்பிய சாமி, சங்கை ஒரு முறை ஊதி விட்டுத் தனக்கு வெள்ளிக் காசுகள் தேவை என்று நினைத்தான். அவன் விரும்பியவாறே அவன்முன் வெள்ளிக் காசுகள் குவிந்தன. அவ்வாறு சாமி சங்கு ஊதும் ஒலி சத்திரக்காரனின் செவிகளிலும் விழுந்தது. தயாரித்த உணவை சாமிக்குப் பறிமாறிக் கொண்டே சத்திரக்காரன் சாமியை ''சற்றுமுன் சங்கு ஊதும் ஒலி கேட்டதே! சங்கை நீயா ஊதினாய்?'' என்று கேட்டான்.

''ஆமாம்!'' என்று பதிலளித்த சாமி, தன்னுடைய அதிசயச் சங்கினை அவனுக்குக் காட்டி அதன் மகிமை பற்றியும், அது தனக்கு எவ்வாறு கிடைத்தது என்பது பற்றியும் உண்மையை எடுத்துரைத்தான்.

சத்திரக்காரன் பேராசை பிடித்தவன் எவ்வாறேனும் அதிசயச் சங்கை சாமியிடமிருந்து திருடிவிடத் தீர்மானித்தான். அன்றிரவு சாமி தூங்கும்போது அவன் தலைப்பாகையில் முடித்திருந்த அதிசயச் சங்கைத் திருடிக் கொண்டு ஒரு சாதாரண சங்கை அந்த இடத்தில் வைத்து விட்டான். இந்த விபரம் தெரியாத சாமி, மறுநாள் அதிகாலை எழுந்து சத்திரக்காரனுக்கு வெள்ளிக்காசுகள் கொடுத்துவிட்டு வீடு திரும்ப இருக்கையில் சத்திரக்காரன் ''தம்பி! நீ என் விருந்தாளி. உன்னிடம் நான் பணம் வாங்க மாட்டேன்!'' என்று மிகவும் பெருந்தன்மையுடன் நடந்து கொள்வதைப் போல் நடித்தான். அவனுக்கு நன்றி தெரிவித்து விட்டு அப்பாவியான சாமி வீட்டை அடைந்தான்.

''என்ன? மலைச்சாமியை நன்றாக வேண்டிக் கொண்டாயா?'' என்று கேட்ட மீனாட்சியிடம், சாமி தன்னுடைய சங்கைப் பெருமிதத்துடன் காட்டினான்.



''உன் கணவனைப் பற்றி என்ன நினைத்துக் கொண்டாய் மீனாட்சி! மலைச்சாமியிடம் வேண்டிக் கொண்டதோடு நிற்காமல், அவர் எனக்குக் கொடுத்த அதிசயச்சங்கையும் எடுத்து வந்திருக்கிறேன்,'' என்று கூறி விட்டு தன் அனுபவங்களை மிகுந்த உற்சாகத்துடன் விவரித்தான்.

அதைக் கேட்ட மீனாட்சி பரபரப் படைந்தாள். ''அத்தனை அற்புத சக்தி உடையதா இந்த சங்கு? எங்கே, நான் சோதித்துப் பார்க்கிறேன்!'' என்று அளவுக்கு மீறிய ஆவலுடன் அந்த சங்கை எடுத்து ஊதிவிட்டு, ''தங்க நாணயம் வேண்டும்'' என்று பிரார்த்தனை செய்தாள். ஆனால் ஒன்றுமே கிடைக்கவில்லை.

உடனே அவளிடமிருந்து அந்த சங்கை தான் வாங்கிக் கொண்டு சாமி முயற்சி செய்தான். பலமுறை முயற்சி செய்தும் ஒரு பலனும் இல்லை. ''ஆகா! ஏன் என்று தெரியவில்லையே! நேற்றிரவு நான் ஊதியபோது வெள்ளிக் காசுகள் கிடைத்ததே!'' என்று அவற்றை எடுத்து அவளுக்குக்காட்டினான்.

உடனே மீனாட்சிக்குப் புரிந்து விட்டது. ''உன்னை அந்த சத்திரக் காரன் ஏமாற்றி விட்டான் என்று தோன்றுகிறது. அவனிடம் ஏன் எல்லாவற்றையும் கூறினாய்? அவன் அந்த அதிசயச் சங்கை தான் எடுத்துக் கொண்டு, வேறு ஏதோ சாதாரணமான ஒன்றை வைத்து விட்டான்!'' என்று பரபரப்புடன் கூவினாள். தான் ஏமாந்து போனதை எண்ணி சாமிக்கு மிகுந்த மனவருத்தம் உண்டாயிற்று.

உடனே மீனாட்சி, ''கவலைப் படாதே! நான் சொல்கிறது போல் செய்! இந்த சாதாரண சங்கை எடுத்துக் கொண்டு மீண்டும் அதே சத்திரத் திற்குச் செல்! இந்த சங்கிற்கு அபூர்வ சக்தியை இன்று காலை ஒரு சாமியார் தனது மந்திரத்தின் மூலம் அளித் திருக்கிறார் என்றும் இப்போது இதிலிருந்து தங்க நாணயங்கள் பெறலாம் என்று அவனிடம் சொல். பிறகு என்ன நடக்கிறது என்று பார்!'' என்று யோசனை கூறினாள்.

மறுநாள் மீண்டும் சாமி தன் சத்திரத்தை நாடி வந்ததைக் கண்ட சத்திரக்காரன் தன் குட்டு அம்பலமாகி விட்டதோ என்று பயந்தான். ஆனால் கோபம், ஏமாற்றம் எதுவுமின்றி சாமி

உற்சாகமாகப் பேசியது அவனுக்கு வியப்பை அளித்தது. பல விஷயங்களைப் பேசிய பிறகு சாமி மீனாட்சி சொல்லிக் கொடுத்தது போல் தன்னிடம் இப்போதுள்ள சங்கு தங்க நாணயங்களைக் கொடுக்கும் சக்தி உடையது என்று சொன்னான்.

அன்றிரவு சாமி தூங்குவது போல் பாசாங்கு செய்து கொண்டிருக்கையில் சத்திரக்காரன் பூனை போல சத்தமின்றி வந்து முதல் நாள் தான் திருடிய சங்கை வைத்து விட்டு சாமியிடமிருந்த சாதாரண சங்கை எடுத்துக் கொண்டான். மறுநாள் காலை ஒன்றுமே தெரியாதது போல் முகத்தை அப்பாவியாக வைத்துக் கொண்டு சாமி சத்திரக்காரனிடம் இருந்து விடை பெற்றுக் கொண்டான். இந்த முறையும் சத்திரக்காரன் பணம் பெற்றுக்கொள்ள மறுத்து விட்டான்.

சாமி அகன்றதும் சங்கை சோதனை செய்த சத்திரக்காரன் பெருத்த ஏமாற்றம் அடைந்தான். அதிசயச் சங்கை கோட்டை விட்டதும் இல்லாமல் சாமி கொடுத்த வெள்ளிக் காசுகளையும் வேண்டாம் என்று கை நழுவ விட்ட தன் அசட்டுத்தனத்தை எண்ணி தன் மீதே கோபம் கொண்டான்.

ஆனால் சாமி அதிசயச் சங்கின் துணைகொண்டு தான் விரும்பிய பொருட்களையெல்லாம் வாங்கிக் கொண்டான். மன்னரிடம் மெய்க் காப்பாளர் வேலையும் கிடைத்து விட தான் ஆசைப்பட்டபடியே தன்னுடைய குதிரையில் கண்கவர் சீருடை அணிந்து கொண்டு மிகவும் மகிழ்ச்சியுடன் நகர்வலம் வந்தான்.

ஒருநாள் சாமி அதே சத்திரத்திற்குச் சென்றான். சாமியின் சீருடையைக் கண்ட சத்திரக்காரன் மிரண்டு போய் விட்டான். ''என்னப்பா! உன்னுடைய சங்கிலிருந்து தங்கக்காசு கிடைக்கின்றனவா?'' என்று சாமி கேட்டதும்



தான், ஆள் அடையாளம் தெரிந்தது. மன்னருடைய மெய்க்காப்பாளனான சாமி தன்னை என்ன பாடுபடுத்தப் போகிறானோ என்று பயந்து, ''ஐயா, என்னை மன்னித்து விடுங்கள்!'' என்று காலில் விழ, சாமி சிரித்துக் கொண்டே கையை ஆட்டிவிட்டுச் சென்று விட்டான்.




# வாசகர்களுக்கானக் கதைப் போட்டி

சிறந்த படைப்பிற்குப் பரிசு ரூ250.

**கீழ்க்காணும் கதையைப் படியுங்கள்:**



**கோ**பாலனின் உறவினர்களில் ஒருவர் மனநோய் மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வந்தார். ஒருநாள் அவரைக் காணச் சென்ற கோபாலன், வரவேற்பறையில் அவருக்காகக் காத்துக் கொண்டிருந்தான். அப்போது அவன் பக்கத்தில் ஒரு நபர் வந்து அமர்ந்தார். கோபாலன் அவரை நோக்கி, ''நீங்களும் யாராவது நோயாளியைப் பார்க்க வந்திருக்கிறீர்களா?'' என்று கேட்டான்.

அதற்கு அந்த ஆள், ''நான் நான்கு மாதங்களாக இங்கு இருந்து சிகிச்சை பெற்று வருகிறேன்'' என்றார். ''உங்களைப் பார்த்தால் மன நோயாளி போல் தெரியவில்லையே!'' என்றான் கோபாலன்.

''நான் மனநோயாளி இல்லை,'' என்றவர் கோபாலனை நோக்கி, ''அதிருக்கட்டும்! உங்களுக்கு மரத்தினால் ஆன செருப்பு பிடிக்குமா அல்லது தோல் செருப்பு பிடிக்குமா?'' என்று கேட்டார்.

''தோல் செருப்புதான்!'' என்று பதிலளித்த கோபாலனிடம் ''அதை எண்ணெயில் பொறித்து உண்ணப் பிடிக்குமா அல்லது வேக வைத்து உண்ணப் பிடிக்குமா?'' என்று கேட்டார்.

கேள்வியே வினோதமாக இல்லை? மீதமுள்ள கதையை நகைச்சுவை ததும்ப 100 முதல் 150 சொற்களுக்குள் வருமாறு எழுதி முடியுங்கள். கதைக்குப் பொருத்தமான தலைப்பு ஒன்று கொடுங்கள். பின்னர் உங்கள் பதிலை, கீழ்க்காணும் கூப்பனுடன் சேர்த்து, ஓர் உறையிலிட்டு, உறை மீது ''வாசகர்களுக்கானக் கதைப் போட்டி'' என்று எழுதி எங்களுக்கு அனுப்புங்கள்.

## முடிவு தேதி : செப்டம்பர் 30, 2005

பெயர் ----------------------------------------வயது-----------பிறந்த தேதி-----------------

பள்ளியின் பெயர் -------------------------------------------------------------------------------

வகுப்பு--------------------------------வீட்டு முகவரி--------------------------------------------

-----------------------------------------------------------------------------------------------------

----------------------------------------------------------------பின்கோடு-------------------

பெற்றோர் கையொப்பம் கலந்து கொள்வோரின் கையொப்பம்

## சந்தமாமா இந்தியா லிமிடெட்

82, டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல் சென்னை-600 097.



# மகான் சீலவாணர்

பிரம்மதத்தர் காசியின் மன்னராக இருந்தபோது, அவருக்குப் புதல்வராக போதிசத்வர் அவதரித்தார். அவருக்கு சீலவாணர் என்ற பெயரிடப் பட்டது.

சிறுவயது முதல் ராஜரீக விஷயங்களிலும் தர்மசாஸ்திரங்களிலும் நன்கு பயின்று தேர்ச்சி அடைந்திருந்த சீலவாணர் பிரம்மதத்தருக்குப்பின் காசியின் மன்னராக முடிசூட்டிக் கொண்டார். தனது குடிமக்களை உயிரினும் மேலாக நேசித்து, அவர்களுடைய நல்வாழ்வே தனது லட்சியமாகக் கொண்டு ஆட்சி புரிந்தார். குற்றவாளிகளைக் கூட கருணையுடன் நடத்தினார். அவர்களுக்குத் தண்டனை அளித்து மேலும் துன்புறுத்தாமல், அவர்கள் மனம் திருந்தி நல்வாழ்வு வாழவகை செய்தார். தவறு செய்பவர்களுக்கு அறிவுரை கூறி அவர்கள் மீண்டும் தவறு செய்யாதவாறு நல்வழிப்படுத்தினார். இத்தகைய செயல்களினால், காசியில் குற்றம் புரிபவர்களின் எண்ணிக்கை குறைந்தது.

ஆனால் சீலவாணரின் இரக்க சுபாவத்தைக் கண்ட கோசல நாட்டு மந்திரி அது அவருடைய பலவீனத்தைக் காட்டுவதாகப் பொருள் கொண்டான். காசி ராஜ்ஜியத்தின் மீது படை எடுத்தால் எளிதில் வென்று விடலாம் என்று மனப்பால் குடித்த மந்திரி தன் மன்னரிடம் காசியின் மீது படை எடுத்துக் கைப்பற்றுமாறு கூறி வந்தான்.

ஆனால் கோசல ராஜாவிற்கு மந்திரியின் வார்த்தைகளில் முழு நம்பிக்கை உண்டாகவில்லை. உண்மையை அறிவதற்காக தன்னுடைய சில வீரர்களை கிராமங்களில் கொள்ளை அடிக்க காசிக்கு அனுப்பி வைத்தான். அதன்படியே கோசல நாட்டு வீரர்கள் காசியின் கிராமங்களைக் கொள்ளை அடிக்க முயன்ற போது கிராமத்து மக்கள் அவர்களைக் கையும் களவுமாகப் பிடித்து சீலவாணரின் முன்னேநிறுத்தினர்.

ஆனால் அவரோ அவர்களுக்கு அறிவுரைக் கூறி பணம் கொடுத்து அனுப்பினார்.

தகவல் அறிந்த கோசல ராஜா வியப்புற்றார். சீலவாணர் தைரியமற்றவர் என்று அவரும் தப்புக்



கணக்குப் போட்டார். இன்னொரு முறை சீலவாணரின் தைரியத்தை சோதிக்கலாம் என்று எண்ணி, மீண்டும் தனது வீரர்களை காசிக்கு கொள்ளை அடிக்க அனுப்பி வைத்தார். அவர்கள் பொதுமக்களிடம் பிடிபட, இந்த முறையும் சீலவாணர் அவர்களை மன்னித்துப் பொருளுதவி செய்து அனுப்பினார். இதன் பிறகு, சீலவாணர் ஒரு கோழை என்று கோசல ராஜா முடிவாகத் தீர்மானம் செய்தார். காசியைக் கைப்பற்றத் திட்டமிட்டு ஒரு பெரும் படையுடன் முற்றுகையிட்டான்.

எதிரிகள் புகாமல் கோட்டை வாயிலை மூடிய பிறகு, காசி நாட்டு வீரர்கள் விரைந்து சென்று சீலவாணரிடம் ''அரசே, கோசல மன்னர் நம்மீது படையெடுத்துள்ளார். நமது கோட்டையை முற்றுகையிட்டுஇருக்கிறார். தாங்கள் அனுமதி அளித்தால் அவர்களுடன் நேருக்கு நேர் மோதி சின்னா பின்னமாக்குவோம்,'' என்றனர்.

சீலவாணர் போரிட விரும்பவில்லை. தன் படைவீரர்களிடம் அமைதியாக ''அவர்களுக்கு இந்த நாடு வேண்டுமெனில் அவர்களே எடுத்துக் கொள்ளட்டும். கோட்டை வாயிலைத் திறந்து விடுங்கள்'' என்றார்.

உடனே ஒரு தூதுவன் மூலம், ''காசி உங்களை வரவேற்கிறது. பகைவனாக இல்லை, நண்பனாக வாருங்கள்!'' என்று செய்தி அனுப்பினார்.

போரிட பயந்து கோழையாக சீலவாணர் சரணாகதி அடைந்து விட்டார் என்று எண்ணிய கோசல ராஜா தன் படையுடன் அட்டகாசமாக காசி நகரில் நுழைந்தான். நேராக சீலவாணரின் சபையை அடைந்தான். சீலவாணரையும், மற்ற படைத் தலைவர்கள் மந்திரிகளைக் கைது செய்ய உத்தரவிட்டு அவர்களுடைய ராஜாங்க உடைகள் மணி முடி ஆகியவற்றைக் கைப்பற்றச் செய்தான்.

''உங்களை நண்பர்களாகவே கருதுகிறோம். ஆகவே நீங்கள் எங்களை இவ்வாறு நடத்துவது சரியல்ல. நாங்கள் நாட்டை விட்டுச் செல்கிறோம்!'' என்று சொல்லிவிட்டு சீலவாணர், மந்திரிபிரதானிகள் புடை சூழ நாட்டை விட்டு வெளியேறினார்.

காசியை விட்டு வெளியேறிய சீலவாணர், தன் மந்திரிகள் சூழ காட்டினை அடைந்தார். அன்றிரவு எதுவும் உண்ணாமல் களைப்புடன் அவர்கள் அனைவரும் காட்டிலேயே படுத்து உறங்கினர்.

திடீரென நடு இரவில் மனிதர்களின் கூக்குரல்களும் காலடிச் சத்தமும்

கேட்டு, சீலவாணரும் உடனிருந்தவர் களும் விழித்துக் கொண்டனர். விழித்த வர்கள் கண்களில் ஒரு கொள்ளைக் கூட்டம் தென்பட்டது. கொள்ளையர் தலைவன் பணிவுடன் சீலவாணரை அணுகி, ''மகாராஜா, நாங்கள் ஒரு காலத்தில் கொள்ளைக்காரர்களாக இருந்தோம். தங்களது ஒப்பற்ற கருணை யினாலும், தாங்கள் எங்கள் மீது காட்டிய அன்பினாலும் மனம் திருந்தி திருட்டுத் தொழிலையே விட்டுவிட்டு அமைதி யாக வாழ்க்கை நடத்தினோம். ஆனால் கயவனான கோசல மன்னன் அநியாய மாகத் தங்களை விரட்டி விட்டது குறித்து, எங்கள் உள்ளம் கொதிக்கிறது. நாங்கள் மீண்டும் கொள்ளையடிக்க ஆரம்பித்து விட்டோம். இன்று அரண் மனையைக் கொள்ளையடித்து தங்க ளுடைய உடை, ஆபரணங்கள், மணி முடி ஆகியவற்றை கவர்ந்து வந்துள் ளோம். கஜானாவில்இருந்து பணமும் கொள்ளையடித்தோம். நீங்கள் இவற்றை அணிந்து கொள்ளுங்கள். உங்களுக்காக நாங்கள் கொண்டு வந்துள்ள உணவை உண்ணுங்கள்,'' என்று கூறினான்.

''நீங்கள் செய்தது தவறு. கோசல மன்னர் இன்றுதான் நமது நாட்டில் பதவி ஏற்றுள்ளார். அவரிடம் உங்கள் துன்பங்களை எடுத்துரைத்தால், அவர் உங்களுக்கு உதவி செய்வார். அவருக்கு அந்த வாய்ப்பைத் தராமல், நீங்கள் பழைய தொழிலுக்குத் திரும்பியது சரியல்ல! அவரிடம் உங்கள் நிலைமையை எடுத்துக்கூறி உங்கள் நல்வாழ்விற்கு உதவி கேளுங்கள்'' என்றார் சீலவாணர்.

''அவன் ஒரு கயவன். உங்களை நயவஞ்சகமாக நாட்டை விட்டுத் துரத்திய அவன் மீது நாங்கள் எப்படி



நம்பிக்கை வைப்போம்? அவனை அரசனாக நாங்கள் மதிக்கவில்லை. நீங்கள் தான் எங்கள் மதிப்பிற்குரிய மன்னர்!'' என்றனர் கொள்ளையர்கள். ஆனால் சீலவாணரோ, ''அந்தப் பணத்தை என்னிடம் கொடுங்கள். நான் நாளைக்கே அவரிடம் சென்று திருப்பிக் கொடுத்து விடுகிறேன். உங்களுக்கு ஒரு நல்வாழ்வு அமைத்துத்தர அவரை நானே வேண்டுகிறேன். நீங்களும் என்னுடன் வாருங்கள்'' என்றார்.

மறுநாள் சீலவாணர், தனது மந்திரிகளும், கொள்ளைக்காரர்களும் புடைசூழ சபையை அடைந்தார். சீலவாணரைக் கண்டதும், கோசல மன்னன் வியப்படைந்தான். கஜானாப் பணத்தைத் திருப்பிக் கொடுத்த சீலவாணர் முதல் நாளிரவு நடந்த விஷயங்களை விளக்கி விட்டு, ''கோசல மன்னரே! நீங்கள் என்னைவிட நேர்மையாகவும் நியாயமாகவும் அன்புடனும் கருணையுடனும் ஆட்சி நடத்துவீர்கள் என்ற நம்பிக்கையில் தான் என்னுடைய நாட்டின் ஆட்சிப் பொறுப்பைத் தங்களிடம் ஒப்படைத்தேன். ஆனால் பாவம் இந்தக் கொள்ளைக்காரர்கள் தங்களுடைய நல்ல இதயத்தை அறியாமல் அவசரப்பட்டு அரண்மனையில் கொள்ளையடித்து விட்டனர். அதைத் திருப்பிக் கொடுப்பதுடன், இவர்களுக்கு உதவி செய்து நல்வாழ்க்கை வாழ அனுமதியுங்கள். இதுவே என் பிரார்த்தனை!'' என்றார்.

அந்த வார்த்தைகளைக் கேட்டதும், கோசல மன்னனின் இதயம் அனலிலிட்ட மெழுகாய் உருகியது. தனது சிம்மாசனத்திலிருந்து இறங்கி வந்து சீலவாணரின் கால்களில் விழுந்து வணங்கினான். ''சீலவாணரே! கொள்ளைக்காரர்கள் கூட உங்களை நேசிக்கிறார்கள் என்றால் நீங்கள் எவ்வளவு உத்தமமானவர்! உங்களிடம் நான் தகாத முறையில் நடந்து கொண்டதற்காக என்னை மன்னித்து விடுங்கள். உங்களது ராஜ்ஜியத்தை நீங்களே பெற்றுக் கொண்டு ஆட்சி செய்யுங்கள். எனக்கு உங்களுடைய ராஜ்ஜியம் வேண்டாம், உங்களுடைய நட்பு ஒன்றே போதும்!'' என்று கண்ணீர் மல்கக் கூறினான் கோசல மன்னன்.

மீண்டும் சீலவாணர் காசிக்கு ராஜாவானார். கோசல மன்னனை சகல மரியாதைகளுடன் அவன் நாட்டிற்கு வழி அனுப்பினார்.





# மகாவிஷ்ணு

**சூ**த மகரிஷி அங்கு கூடி இருந்த முனிவர்களிடம் புத்தரவதாரம் பற்றிக் கூறலானார்.

கலியுகத்தில் பலநூறு ஆண்டுகள் கழிந்தன. மனி தர்கள் ம னிதத் தன்மையை மறந்து மிருகங்கள் போலக் கொடியவர்களாக மாறி விட்டார்கள். மனிதன் தன் அறிவைக் கொண்டு சிந்தித்து நற்செயல்களைச் செய்து தன்னை உயர்த்திக் கொண் டால்தான் நல்லது என்ற நிலை ஏற்பட்டது.

இதற்கு முன் மகாவிஷ்ணு அவதரித்து யாரோ ஒரு சில துஷ்டர் களாக இருந்தவர்களை மட்டுமே ஒழித்தார். இப்போதோ மனித சமுதாயம் முழுவதையும் மாற்ற வேண்டியதாயிற்று. அவர்கள் ஒரு வரை ஒருவர் அடித்தும் துன்புறுத் தியும், யாகங்கள் என்ற பெயரில் உயிரினங்களை ஈவிரக்கம் இல்லாது பலியிட்டும் வந்தார்கள். மது, மாமிசம் என்பதை தாராளமாக உண்டு மதி ம யங்கினார்கள். இ தனால் அவர்கள் கேளிக்கைகளில் ஈடுபட்டு வறுமை, பிணி, முதலியவற்றினால் பீடிக்கப்பட்டு துன்பப்படலானார்கள்.

இவற்றை எல்லாம் போக்க மகாவிஷ்ணு மானிடராகப் பிறந்து அவர்களது மத்தியில் வாழ்ந்து அவர்களது அறிவை நல்ல வழியில் திருப்பி செயல்படச் செய்வதற்காக புத்தராக அவதாரம் எடுத்தார்.

நேபாள நாட்டின் தலைநகரம் கபிலவஸ்து. அதை சுத்தோனன் மன்னன் ஆண்டு வந்தான். அவனது மனைவியின் பெயர் மாயாதேவி. அவள் ஒருநாள் ஆகாயத்திலிருந்து



வெள்ளையானை ஒன்று வந்து தன் உடலிலுள் புகுந்ததுபோலக் கனவு கண்டாள். அதைக் கேட்ட பண்டிதர் களும் சோதிடர்களும் மகாராணி உலகமே மகாபுருஷர் எனப் போற்றக் கூடியவிதமாய் ஒரு ஆண்குழந்தை யைப் பெற்றெடுப்பாள் எனக் கூறினார்கள்.

சில நாள்களுக்குப் பின் மாயா தேவி பல்லக்கில் அமர்ந்து தன் பிறந்த வீட்டிற்குச் சென்று கொண்டிருந் தாள். அப்போது வழியில் வைசாக பௌர்ணமியன்று லும்பினி என்ற வனத்தில் ஒரு அழகிய ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள்.

பெற்ற குழந்தையைக் கொஞ்சிக் குலாவி வளர்க்க மாயாதேவி வெகுநாள்கள் உயிர் வாழவில்லை. குழந்தை பிறந்த சில நாள்களிலேயே அவள் இறந்து விட்டாள். தாயில்லா குழந்தையை சுத்தோதன மன்னன் கண்ணை இமை காப்பது போலக் காத்து வளர்த்து வந்தான்.

குழந்தைக்கு கௌதம சித்தார்த்தன் எனப் பெயரிட்டு மன்னன் அதனைச் சீராட்டிப் பாராட்டி வளர்க்கலானான். சோதிடர்கள் சித்தார்த்தனின் ஜாதகத்தைப் பார்த்துவிட்டு ''அரசே! இவன் மாபெரும் சக்கரவர்த்தி ஆவான். மாபெரும் மன்னர்கள் எல்லாம் இவனுக்கு அடிபணிந்து கிடப்பார்கள்'' எனக் கூறினார்கள். அதுகேட்டு மன்னன் மகிழ்ந்து போனான்.

அப்போது அவர்கள் ''இவ்வளவு இருந்தும் இவனுக்குச் சன்னியாசி ஆகும் யோகம் உள்ளது'' என்றனர். அது கேட்டு மன்னர் திடுக்கிட்டு ''இவன் சக்கரவர்த்தியாவான் என்கிறீர்கள். அடுத்து சன்னியாசியாவான் என்றும் சொல்கிறீர்களே. இதென்ன பிதற்றல்?'' என்று கேட்டான்.

அவர்களும் ''அரசே! இவன் மிக இளகிய மனம் படைத்தவன். அதனால் பிறர் துன்பப்படுவதை இவன் பார்க்கக் கூடாது'' என்றனர்.

மன்னனும் அப்படிப்பட்டவர்கள் சித்தார்த்தனின் பார்வையில் படாமல் இருக்கச் செய்து துன்பம் என்பது அவனுக்குத் தெரியாமல் இருக்கும் படி எல்லா ஏற்பாடுகளையும் செய்தான். அரண்மனைக்குள்ளேயே ஆடல்பாடல்களுக்கான ஏற்பாடு களைச் செய்து அவனது மனத்தை

மகிழ்விக்க முயன்றான். ஒருநாள் சித்தார்த்தன் பூங்காவில் அமர்ந்திருக்கையில் ஒரு அன்னப் பறவை துடிதுடித்தவாறே ஓடிவந்து அவனது மடியில் விழுந்தது. இளவரசன் அதனைத் தூக்கி அதன் உடலில் குத்தி இருந்த அம்பை மெதுவாக எடுத்து காயத்திற்குப் பச்சிலை தடவி அதன் உயிரைக் காத்தான்.



அப்போது சித்தார்த்தனின் சிற்றப்பாவின் மகனான தேவதத்தன் ஓடி வந்து ''அந்த அன்னப்பறவை என்னுடையது நான்தான் அதனை அம்பால் அடித்தேன்'' என்றான். சித்தார்த்தனோ ''நான்தான் உயிர் போகாமல் காப்பாற்றினேன். அதனால் இது என்னுடையது'' என்றான். இருவரும் தர்பாருக்குப் போய் தம் கட்சிகளை எடுத்துரைத்தார்கள். சபையிலிருந்த நீதிமான்கள் ''இதன் உயிரைக் காத்தவனுக்கே இப்பறவை சொந்தம்'' என ஒரு மனதாகத் தீர்ப்புக் கூறினார்கள்.

இதனால் இளம் பிராயத்தில் இருந்தே தேவதத்தனுக்கு இளவரசனான சித்தார்த்தன் மீது பொறாமையும் வெறுப்பும் ஏற்பட்டது. சாக்கியர்கள் ஆயுதங்களைப் பயன்படுத்தி வீரவாழ்வு வாழ்பவர்கள். வேட்டையாடுவது அவர்களுக்கு மிகப் பிரியமானது. ஆனால் சித்தார்த்தனுக்கு வேட்டையாடப் பிடிக்கவே இல்லை. வில் அம்புகளை நன்கு பிரயோகிக்கத் தெரிந்த போதிலும் அவன் மிருகங்களைத் துன்புறுத்துவதையும் கொல்வதையும் விரும்பவில்லை. அவனுக்கு வீணாக பொழுதைக் கழிக்கப் பிடிக்கவில்லை. கேளிக்கைகளில் மனம் செல்லவில்லை. பிறர் துன்புறுவதைக் காண அவன் மனம் சகிக்கவில்லை. சுத்தோதனனோ தன் மகன் மற்ற இளவரசர்களைப் போல எல்லா விதத்திலும் இருக்க வேண்டுமென விரும்பினான்.

இளவரசன் நகரில் சுற்றி வரும்போது நோயாளிகளோ கிழவர்களோ இறந்தவர்களோ அவனது பார்வையில் படக்கூடாது என சுத்தோதன மன்னன் ஏற்பாடு செய்திருந்தான். சித்தார்த்தனையும் தேரில் ஏற்றிக் குறிப்பிட்ட வீதிகளில் மட்டுமே கொண்டு போய்வருமாறு தேரோட்டிகளுக்கும் பணித்திருந்தான்.



சித்தார்த்தன் இளைஞன். சுதந்திர மாக இருக்க விரும்புபவன். எதையும் ஆராய்ந்து பார்த்து முடிவுக்கு வருபவன். வீண் ஆடம்பரங்களை அவன் மனம் நாடவில்லை. இது கண்டு சுத்தோதன மன்னன் பெரிதும் கவலை கொண்டான். சித்தார்த் தனுக்குக் கல்யாணம் செய்து வைத்தால் அவன் மனத்தைத் திருப்பி விடலாம் என எண்ணி சாக்கிய வம்சத்தில் பிறந்த அழகான கன்னிப் பெண்களையெல்லாம் அரண் மனையில் ஒன்று கூட்டினான்.

அந்தக் கன்னிப் பெண்கள் இளவர சனின் மனத்தைக் கவர ஆடினார்கள். பாடினார்கள். ஆனால் சித்தார்த்தன் அவர்களை ஏறெடுத்தும் பார்க்க வில்லை. அவர்கள் அணிந்திருந்த பட்டாடைகளோ முத்தாரங்களோ அவனைக் கவரவில்லை. ஆனால் அப்பெண்களோ தம் முயற்சியில் தோல்வியுற்று ஒவ்வொருத்தியாக அந்த இடத்தைவிட்டுச் சென்றனர். சித்தார்த்தன் எதுவும் கூறாமல் சிலை போல அமர்ந்திருந்தான்.

கடைசியில் அழகி ஒருத்தி வந்தாள். அவள் ஆடவும் இல்லை பாடவும் இல்லை. சித்தார்த்தனை ஓரக் கண்ணால் பார்த்தாள். அவளது அடக்கமும், நாணமும் அவன் மனத்தைக் கவர்ந்தது. மற்ற பெண் களைப் போல ஆர்ப்பாட்டம் செய்யாமல் அமைதியாக இருப்பது கண்டு அவன் மகிழ்ந்தான். அவள் பெயர் யசோதரை. அவள் ஒரு சிற்றரசனின் மகள்.

சித்தார்த்தனுக்கு யசோதரை மிகவும் பிடித்துப் போய் விட்டது. இந்த விஷயம் சுததோதன மன்னனுக்கு தெரியவே அவன் அச்சிற்றரசனைத் தன்சம்மந்தியாக ஆக்கி கொள்வதாகத் தெரிவித்தான். ஆனால் தேவதத் தனோ திருமணத்திற்கு முன்னே போட்டி வைத்து அதில் வெற்றி பெறுபவனுக்கே யசோதரையை மணம் செய்து வைக்க வேண்டும் எனப் பிடிவாதம் பிடித்தான்.

சுத்தோன மன்னனும் அவ்வாறே செய்யலாம் எனக் கூறவே யசோத ரையின் தந்தையும் அவளது சுயம் வரத்திற்கான ஏற்பாடுகளைச் செய்தான். பலவிதப் போட்டிகள் நடந்தன. எந்தப் போட்டியிலும் சித்தார்த்தனை வெற்றி பெற்று முதலா

வதாக வந்தான். அவனுக்கு கூடிய வரை சமமாக தேவதத்தனும் வரவே இறுதியில் சித்தார்த்தனுக்கும் தேவதத்தனுக்கும் இடையே போட்டி நடந்தது. அதிலும் சித்தார்த்தன் தான் வெற்றி பெற்றான். அம்பு எய்வது, வாட்போர் புரிவது, குதிரையேற்றம் போன்றவைகளில் சித்தார்த்தனின் திறமை கண்டு யாவரும் வியந்து ஆகாவென்று பாராட்டினார்கள். சித்தார்த்தனுக்கும் யசோதரைக்கும் விமரிசையாக விவாகம் நடை பெற்றது.

இதனால் சுத்தோதனனின் மனம் சற்று நிம்மதி அடைந்தது. இனி சித்தார்த்தன் குடும்ப வாழ்க்கையில் ஈடுபட்டு நாளடைவில் சக்கரவர்த்தி எனப் புகழ்பெற்றுவிடுவான் என எண்ணி மன்னன் மகிழ்ந்து கொண்டு இருந்தான்.

யசோதரை தன் கணவனைப் பெரிதும் போற்றி வணங்கி வந்தாள். சித்தார்த்தனிடம் ஏதோ ஒரு அபூர்வ சக்தி இருப்பதை அவள் உணர்ந்தாள். சித்தார்த்தனும் அரண்மனையை விட்டு வேறு எங்கும் போகவில்லை. சில மாதங்களாயின. யசோதரை கர்ப்பமுற்று உரிய காலத்தில் ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுத் தாள். அவனுக்கு ராகுலன் என்ற பெயர் வைக்கப்பட்டது.

ஒருநாள் சித்தார்த்தன் தேரில் அமர்ந்து தேரோட்டியை நகரவீதி களில் ஓட்டிச் செல்லுமாறு கூறினான். தேரோட்டியும் தேரை நகர வீதிகளில் ஓட்டி சென்றான். அப்போது ஒரு



கிழவன் தள்ளாடி நடந்து வருவதைக் கண்டு சி த்தார்த்தனின் ம னம் உருகியது. அவனுக்கு ஏன் யாருமே உதவவில்லை என அவன் மனத்தில் கேள்வி எழுந்தது.

மேலும் சற்றுசதூரம் தேர் சென்றதும் ஒரு நே ாயாளி தென் பட்டான். அவன் பரம ஏழை. குடியால் கடும் நோய்க்கு ஆளாகி குடியைவிட முடியாது அந்நிலைக்கு வந்திருப்பது நன்கு தெரிந்தது. அடுத்து சிலர் இறந்த ஒருவனது உடலைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தார்கள். அதைக் கண்டு சித்தார்த்தன் முகத்தைத் திருப்பிக் கொண்டான். அதன்பின் ஒரு சன்னியாசி கையில் கப்பரை ஏந்தி வருவதைக் கண்டான். அதுவரை கவலை தோய்ந்த முகத்தோடு இருந்த சித்தார்த்தனின் முகம் சன்னியாசி யைக் கண்டதும் மலர்ந்தது.

சித்தார்த்தன் தான் க ண்ட காட்சி களைப் பற்றி தேரோட்டியிடம் விசாரிக்க, அ வனும் உ ண்மையை ஒளிக்காமல் கூறினான். உடனே தேரை அரண்மனைக்குத் திருப்பி விடும்படி இளவர சன் கூறவே அவனும் அரண்மனைக்குத் திருப்பி னான். அன்றிரவு சித்தார்த்தனுக்குத் தூக்கம் வரவில்லை. தான் கண்ட காட்சியைப் பற்றி யோசித்தான். அங்கும் இங்கும் நடைபோட்டான். யசோதையையும் ராகுலனும் படுத்துத் தூங்குவதை அவன் கவனித்தான். பின்னர் ஒரு முடிவிற்கு வந்தவனாய் அவர்களை ஒருமுறை நன்கு பார்த்து விட்டு குதிரைகள் கட்டப்பட்டிருந்த லாயத்திற்குச் சென்றான். அங்கு தன் தேரோட்டியிடம் ஒரு உயர்தரக் குதிரையைத் தேர்ந்தெடுக்குமாறு கூறினான்.

இளவரசன் வெண்ணிலா இரவில் குதிரை சவாரி செய்து மனம் மகிழ நினைக்கிறான் என எண்ணி அவனும் நல்ல குதிரையாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டு வந்தான். சித்தார்த்தன் அதன்மீது ஏறி உட்கார அந்தத் தேரோட்டியே குதிரையின் கடிவாளத் தைப் பிடித்துக் கொண்டு அதனை மெதுவாக நடத்திச் சென்றான்.





# தன் கையே தனக்குதவி

ஒரு கிராமத்தில் ராமு, சோமு என்ற இரு நண்பர்கள் வசித்து வந்தனர் . இருவரும் ஏழைகள். இருவருக்கும் பொருள் சம்பாதித்து வாழ்வில் முன்னேற வேண்டும் என்ற ஆர்வம் இருந்ததால் நகரத்தை நோக்கிச் சென்றனர். செல்லும் வழியில் ஒரு முனிவரது ஆசிரமம் தென்படவே இருவரும் அங்கு சென்று முனிவரை வணங்கித் தங்கள் விருப்பத்தைக் கூறினர்.

முனிவர் அவர்களை நோக்கி, ''உங்களில் ராமு ஒரு அந்தணன். ஆன்மீகத்தில் ஈடுபட்டு, மற்றவர்களுக்கு ஞானம் போதிப்பதே அந்தணனின் கடமை. ஆகவே ராமுவிற்கு வேதம், சாஸ்திரம் மற்றும் ஞான மார்க்கத்தை உபதேசிக்கும் நூல்களைக் கற்றுக் கொடுப்பேன். சோமு ஒரு வணிகன். ஆகவே சோமுவிற்கு வணிகத் துறையின் நுணுக்கங்களைக் கற்றுக் கொடுப்பேன். நான் உங்களுக்குக் கற்றுத் தருவதைக் கொண்டு நீங்கள் வாழ்வில் நல்ல முன்னேற்றம் காண முடியும்'' என்று அறிவுரை தந்தார்.

பின்னர், இரு நண்பர்களும் மூன்று ஆண்டுகள் முனிவரிடம் தங்கிப் பயின்று தேர்ச்சி பெற்றனர். பிறகு முனிவரிடம் வி டை பெற்றுக் கொண்டு ராமு மன்னரின் ஆஸ்தானப் பண்டிதராக வேலைக்குச் சேர சோமு தனியாக வி யாபாரம் செய்யத் தொடங்கினான். இருவரும் தாங்கள் விரும்பியபடியே சில ஆண்டுகளில் வாழ்வில் முன்னேற்றம் கண்டனர். இருவரும் இல்வாழ்க்கையை மேற்கொண்டனர்.

ராமுவிற்கு கிருஷ்ணன் என்ற மகன் பிறந்தான். தன்னைப்போல் ஒரு பண்டிதராக தன் மகன் விளங்க வேண்டும் என்று ராமு ஆசைப்பட, கிருஷ்ணனுக்கோ வேத சாஸ்திரங்கள் பயிலுவதில் நாட்டமேயில்லை.



எப்போதும் ஆடிப்பாடி விளையாடிக் கொண்டே காலம் கழித்தான்.

ஒருநாள் ராமு சில மாணவர் களுக்கு வேதத்தின் ஒரு தத்துவத்தை விளக்கிக் கூற முயற்சி செய்து கொண்டிருந்தார். ஆனால் அவர் சொன்னது யாருக்கும் புரியவில்லை.

பலவாறு விளக்கியும் மாணவர் களுக்குப் புரியாததால், சலிப் படைந்த ராமு விளக்கம் சொல்வதை நிறுத்தி விட்டார். அப்போது கிருஷ்ணன் அதே தத்துவத்தை தன் பாணியில் அங்கிருந்த மாணவர் களுக்கு விளக்கிக் கூற, மாணவர் களால் கிருஷ்ணன் தந்த விளக்கத்தை எளிதாகப் புரிந்து கொள்ள முடிந்தது. மாணவர்களுக்குப் பயிற்றுவிக்கும் திறமை தன்னை விட கிருஷ்ணனுக்கு அதிகம் என்பதைப் புரிந்து கொண்ட ராமு தன் மகனை நினைத்துப் பெருமை அடைந்தார். இத்தகைய புத்திசாலி, கல்வியில் நாட்டம் கொண்டு நன்கு பயின்றால் அவனால் பெரிய பண்டிதராக ஆக முடியும் என்று ராமுவிற்குத் தோன்றியது.

''குழந்தாய்! உனக்குத் திறமை உள்ளது. நீ மட்டும் நன்றாகப் பயின்றால் என்னைப்போல் நீயும் செல்வந்தனாக விளங்கலாம்!'' என்ற தந்தையின் பதிலுக்கு ''தேவை இல்லை! உங்களிடம் தான் செல்வம் உள்ளதே! நான் எதற்கு சம்பாதிக்க வேண்டும்?'' என்று அலட்சியமாக கிருஷ்ணன் பதில் அளித்தான்.

தன் மகனின் மனத்தை எவ்வாறு மாற்றுவது என்று சஞ்சலத்திலிருந்த ராமுவை சந்திக்க அவரது தோழர் சோமு வந்தார். அவரிடம் தன் மகனைப் பற்றி குறை கூறிய போது சோமு தன் மகன் வாசுவும் அதேபோல் வணிகத்தில் நாட்டமின்றி இருப்ப தாகக் குறைப்பட்டுக் கொண்டார். பிறகு இருவரும் கூடி நீண்ட நேரம் ஆலோசனை செய்தனர். அதன்படி தன் மகன் வாசுவை ராமுவிடம் விட்டுவிட்டு, சோமுவும் அவர் மனைவியும் வேறு நகரத்திற்கு வியாபாரம் செய்யச் சென்று விட்டனர். வாசு ராமுவின் வீட்டில் தங்கி கிருஷ்ணனுடன் சேர்ந்து வசிக்கத் தொடங்கினான். விரை விலேயே, வாசுவும் கிருஷ்ணனும் இணைபிரியாத தோழர்களாயினர். இவ்வாறு இரண்டு மாதங்கள் கழிந்தன.

ஒருநாள் ஒரு ஆள் ராமுவிடம் வந்து, ''ஐயா, தங்கள் நண்பர்



சோமுவும், அவர் மனைவியும் கடல் கடந்து வியாபாரம் செய்ய ஏராளமான பொருட்களுடன் கப்பலில் செல்லும் போது, கப்பல் மூழ்கி அவர்கள் இருவரும் இறந்து விட்டனர். அவருடைய பொருட்கள் அனைத்தும் மூழ்கி விட்டன. அந்த நட்டத்தை சரிக்கட்ட, அவருடைய வீட்டை விற்க வேண்டி வரும்'' என்றான். அந்தச் செய்தியைக் கேட்டு வாசு கதறியழுதான். கப்பல் மூழ்கியதால் தன் பெற்றோர் சொத்து அனைத்தையும் இழந்து, தான் ஒரு பிச்சைக்காரனுடைய நிலைக்கு வந்து விட்டதை எண்ணித் துடித்தான்.

அவனுடைய பெற்றோரின் பிரிவிற்காக பெரிதும் வருந்திய வாசுவிற்கு ஆறுதல் கூறிய பிறகு, ராமு நிதானமாக, ''வாசு! உன்னுடைய நிலைமை பரிதாபத்திற்குரியது. ஆனால் உன்னை நான் எத்தனை நாள் இங்கு தங்கச் செய்து உணவிட முடியும்? இனி நீ வேறு எங்காவது சென்று பிழைத்துக் கொள்!'' என்றார்.

ராமுவுடைய இரக்கமற்ற சொற்களைக் கேட்ட வாசு, கிருஷ்ணன் இருவருமே அதிர்ச்சியுற்றனர். ''தந்தையே, இந்த நிராதரவான நிலையில் அவனை வீட்டை விட்டு வெளியேற்றினால் அவன் என்ன செய்வான்? நீங்கள் செய்வது தவறு. நாம்தான் அவனுக்கு ஆதரவு அளிக்க வேண்டும்'' என்று கிருஷ்ணன் தன் நண்பனுக்காகப் பரிந்து பேசினான்.

''புரியாமல் பேசுகிறாய் மகனே! யாருக்கு யார் ஆதரவு தருவது? நீ என் மகன். ஆகவே உன்னை வைத்துக் காப்பாற்றுவது என் பொறுப்பு. ஆனால் வாசு என் மகனல்லவே! அவனை வைத்துக் காப்பாற்ற நான் ஏன் முற்பட வேண்டும்? '' என்று கேட்டார் ராமு.

''நீங்கள் சொல்வது தவறு. வாசு யார்? அவன் உங்களுடைய நண்பரின் புதல்வன். உங்கள் நண்பரின் மகனுக்கு இந்த உதவி கூட செய்யமாட்டீர்களா? '' என்று கிருஷ்ணன் கோபத்துடன் கேட்டான்.

உடனே ராமு, ''சோமு நன்றாக வாழ்ந்தபோது அவனுடைய செல்வத்தை அனுபவித்த அவனுடைய உறவினர்கள் பணியாளர்கள் எத்தனை பேர் உள்ளனர்? அவர்களைஏன் இந்த உதவியை கேட்கக் கூடாது? முதலில் அதைச் செய்!'' என்றார். ''அப்படியே செய்கிறேன்!'' என்று வெறுப்புடன் கூறிவிட்டு தன் நண்பனை அழைத்துக்

கொண்டு கிருஷ்ணன் அவனுடைய உறவினர்களையும் மற்றவர்களையும் நாடிச் சென்றான். ஆனால் என்ன ஏமாற்றம்? ஒருவருமே வாசுவை ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை.

''மகனே! இ துதான் உல கம்!'' என்றார் ராமு. தொடர்ந்து ''வாசு! உன்னுடைய தந்தை உயிருடன் இருந்தவரை அவருடைய செல்வத் தினால் அவருக்கு சமூகம் மதிப்பு அளித்தது. அவரைச் சார்ந்திருந்த உனக்கும் மதிப்பு இருந்தது. ஆனால் உன் தந்தையுடைய சொத்தும் நாசமாகி அவரும் மறைந்தபிறகு அந்த மதிப்பும் மறைந்து விட்டது. உன்னை மற்றவர்கள் மதிக்க உன்னை வைத்துப் பராமரிக்க உன்னிடம் என்ன தகுதி உள்ளது? உன்னை ஏற்றுக் கொள்ள ஒருவரும் இணங்க மாட்டார்கள். ஆகவே உனக்கென்று ஒரு தகுதியை உண்டாக்கிக் கொள்!'' என்றவர் கிருஷ்ணனை நோக்கி, ''கிருஷ்ணா! நான் இப்போது கூறியது உனக்கும் பொருந்தும். ஆஸ்தானப் பண்டிதராயிருக்கும் என்னை நீ சார்ந்துள்ள வரை உனக்கு இருக்கும் பாதுகாப்பு நான் மறைந்த பிறகு இருக்காது. ஆகவே தோழர்களாகிய நீங்கள் உ ங்களை இ ந்த ச மூகம் மதிக்கவேண்டுமானால் உ ங்கள் சொந்தக்கால்களில் நிற்க முயற்சி செய்யுங்கள். அதற்குத் தேவை கல்வி. நானும் சோமுவும் பயின்ற அதே முனிவரிடம் சென்று கல்வியை ஊக்கத்துடன் பயின்று, வாழ்க்கையில் சுயமாக முன்னேற முயற்சி செய்யுங்கள்!'' என்று அறிவுரை பகன்றார்.

அவருடைய அறிவுரையால் மனம் திருந்திய இருவரும் கல்வி பயில முனிவரிடம் செல்லத் தயாராயினர். அப்போதுதான் வாசுவிற்குத் தெரிந்தது தன் பெற்றோர் உயிருடன்இருப்பதாக! அது மட்டுமல்ல கப்பல் மூழ்கியதும், பொருட்கள் நாசமானதாகத் தான் கேட்டதும். அனைத்தும் ஒரு நாடகமே என்று வாசு அறிந்தான். வாசுவும் கிருஷ்ணனும் மனம் திருந்தி நல்ல முறையில் ஆர்வத்துடன் பயிலு வதற்காக இருவரின் பெற்றோரும் சேர்ந்து நடத்திய நாடகமே அது என்றும் தெரிந்து கொண்டனர்.



# சூர்யா

## வீர இளவரசனின் துணிகரச் செயல்கள்

26

வீரசிம்மனும் ஜபர்சிங்கும் கஜானாவிலுள்ள பொருட்களை பகலில் எடுத்துக் கொள்ளலாம் என்று தீர்மானிக்கின்றனர். வசந்தன், சூர்யா இருவரும் கஜானாவைக் காவல் காத்துக் கொண்டிருந்தவர்களைக் கட்டிப் போட்டுவிட்டு அங்குள்ள பொருட்களை அப்புறப்படுத்தி விடுகின்றனர். மறுநாள் காலை அங்கு வந்த வீரசிம்மனும் ஜபர்சிங்கும் பெருத்த அதிர்ச்சிக்கு ஆளாகின்றனர். அப்போது அங்கு வந்த அம்பு செய்தியில் "கஜானாவிலுள்ள செல்வம் பொது மக்களுடையது. இளவரசன் சூர்யா" என்று எழுதப்பட்டிருந்தது.

ஓவியம் : காந்தி அய்யா

இரண்டு காவல் வீரர்களும் வீரசிம்மன் முன் அழைத்து வரப்படுகின்றனர்.

எங்களை மன்னித்து விடுங்கள், மகாராஜா

இவர்களுக்கு அந்த இளவரசன் சூர்யா யார் என்று தெரியவில்லையாம்!

அப்படியானால் இவர்களை ஏன் அழைத்து வந்தீர்கள்.

இவர்கள் போகட்டும்!

ஜபர், கஜானாவைக் கொள்ளை அடித்தவர்கள் புரட்சிக்காரர்களாகத் தான் இருக்கும்.

இளவரசன் சூர்யா அவர்களின் தலைவனாக இருக்கலாம்...

மற்ற வீரர்களைத் திரட்ட இப்போது நேரமில்லை. நாம் உடனே அவர்களைச் சென்று தாக்குவோம்!

ஆனால் மகாராஜா! நம்மிடத்தில் போதிய வீரர்கள் இல்லை

அவன் யாராயிருந்தாலும் பரவாயில்லை! அமிருதபுரியின் மீது படை எடுப்போம்.

நமது திட்டம் ரகசியமாக இருக்கட்டும்.

அப்படியே ஆகட்டும் மகாராஜா! படை திரட்ட நான் ஏற்பாடு செய்கிறேன்.


வசந்தனுடைய வீரர்களில் ஒருவன் ஜெயானந்தரை சந்திக்கிறான்.
என்ன செய்தி கொண்டு வந்திருக்கிறாய், மனோகரா?
வீரசிம்மன் நாளை அமிருதபுரி மீது படையெடுக்கத் திட்டமிட்டுள்ளான்.
கேட்டாயா சூர்யா? இதை நாம் தடுத்தே ஆக வேண்டும்.
வசந்தன் தற்சமயம் எங்கே?
மற்றவர்களுடன் சாந்திபுரத்தில் இருக்கிறார்.
சூர்யாவையும் அழைத்து வரும்படி கூறியிருக்கிறார். சூர்யா யார்?
இதுதான் சூர்யா!
என்னை இவர் அழைக்க வந்திருப்பதால் இவருடன் செல்ல அனுமதியுங்கள் சுவாமி!
துரோகிகளிடம் இருந்தும், கயவர்களிடமிருந்தும், நாட்டைக் காப்பாறியே ஆக வேண்டும்.
கனகதுர்கா தேவி உன் முயற்சியில் வெற்றி அளிப்பாள். சென்று வெற்றியுடன் வா மகனே!
நன்றி சுவாமி! வருகிறேன்!
சூர்யாவும் மனோகரனும் செல்வதை ஜெயானந்தர் பார்த்துக் கொண்டே இருக்கும் போது மினி உள்ளே வருகிறது.
என்னுடைய செய்தியை அனுப்பி விட்டாயா மினி?


கிளி முனிவரின் தோளில் அமர்ந்து கொள்கிறது.
சுகதேவர் வருகிறாரா?


சுகதேவர் ஆசிரமத்தை நோக்கி வருகிறார்.
நான்தான் சுவாமி!
உள்ளே வா, சுகதேவா! ஒரு தகவல் உள்ளது.


சூர்யாவும் வசந்தனும் சேர்ந்து வீரசிம்மன் கஜானாவைக் கொள்ளையடிப்பதைத் தடுத்து விட்டனர். ஆனால் கஜானாவை புரட்சிக்காரர்கள் கைப்பற்றி இருப்பதாக அவன் நினைக்கிறான்.
அடுத்து வீரசிம்மனின் திட்டம் என்ன? சூர்யா எங்கே?


புரட்சிக்காரர்களின் மீது தாக்குதல் நடத்த வீரசிம்மன் அமிருதபுரியை நோக்கிப் படையுடன் செல்லத் திட்டமிட்டுள்ளான். வசந்தனும் மற்ற வீரர்களும் சாந்தி புரத்தில் உள்ளனர். சூர்யாவையும் தன்னுடன் சேர வசந்தன் அழைத்திருக்கிறான்.
அப்போது நாளை பயங்கரப் போர் மூளும்.


முனிவர் தீவிரமாக யோசிக்கிறார்.
சுவாமி சூர்யாவிற்கு ஏதாவது...


சுகதேவர் எழுந்து நிற்கிறார்.
சூர்யாவைப் பற்றிக் கவலை வேண்டாம். அவன் வெற்றி பெறுவான். வீரசிம்மன் அமிருதபுரிக்குப் படையெடுத்து சென்று இருக்கும் போது, நீ உன் படையுடன் அவனுடைய கோட்டையை முற்றுகையிடு!
ஆகட்டும் சுவாமி! சூர்யாவின் தாயத்து பற்றி ஞாபகம் உள்ளதா?


அதை நாம் சூர்யாவிடம் எப்பொழுது கொடுப்பது?
அதற்குரிய நேரம் இன்னும் வரவில்லை. வரும் போது அவனுக்குரிய சகல அதிகாரங்களோடு அதையும் கொடுக்கலாம்.


சுவாமி, சூர்யாவின் நலனுக்காக சுகன்யா எப்போதும் கடவுளிடம் பிரார்த்தனை செய்து கொண்டே இருக்கிறாள்.
அவள் எங்கிருந்தாலும், சூர்யா அவளுடைய உதவிக்கு வருவான்.
சுகதேவர் விடை பெறுகிறார்.
நான் சொன்னது நினைவு இருக்கட்டும்.
வீரசிம்மனின் கோட்டையை நான் முற்றுகை இடுவேன்.


சூர்யா வசந்தனை சந்திக்கிறான்.
நான் வந்து விட்டேன்.
உங்கள் வரவை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம் இளவரசே!


வீரசிம்மனும் அவனுடைய வீரர்களும் நதியை கடக்கு முன், நாம் இந்த குறுக்குப் பாதை வழியே சென்று விடுவோம்.
வீரசிம்மனை அவனுடைய வீரர்களிடமிருந்து பிரிந்து போகுமாறு செய்வோம்.


ஒரு வீரன் அங்கே வருகிறான்.
வசந்தா! நான் இப்பொழுது தான் காலடி சத்தத்தைக் கேட்டேன். மலைகளுக்கு அருகில் வந்து விட்டனர் என்று தோன்றுகிறது.
அங்கேயே எதிர் கொள்வோம்.
நமது ஆட்களைத் தயார் செய்!


புரட்சி வீரர்கள் அணிவகுத்துத் தயாராக நிற்கின்றனர்
வா வசந்தா, நாம் செல்வோம்!
எல்லாம் சரியாக உள்ளது!
தொடரும்



# அம்புலிமாமா

(நவம்பர் 2005 இதழ்)

# குழந்தைகளின் சிறப்பிதழ்

இளம் எழுத்தாளர்களையும் கலைஞர்களையும் (வயது 6-15) சொந்தக் கற்பனையில் உருவான கதைகளையும் ஓவியங்களையும் அனுப்புமாறு அழைக்கிறது.

## கதைகள்

● அதிகபட்சம் மூன்று. ● *அம்புலிமாமா* வெளியிடப்படும் எந்த மொழியிலும் இருக்கலாம். ● 500 வார்த்தைகளுக்கு மேற்படாமல் இருக்க வேண்டும். ● பொருத்தமான தலைப்பு தர வேண்டும். ● தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகள் அனைத்து மொழிகளிலான இதழ்களிலும் வெளியாகும்.

## ஓவியங்கள்

● அதிகபட்சம் மூன்று. ● குறைந்தபட்ச அளவு 15 x 10 அங்குலங்கள். ● இந்தியப் புராணக் கதைகளில் வரும் நிகழ்ச்சிகளை மையமாகக் கொண்டிருக்க வேண்டும். ● தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் மையக் கருத்தை விளக்க சென்னைக்கு வரத் தயாராக இருக்க வேண்டும். ● பயணச் செலவு வழங்கப்படும்.



## பொது

● ஒரு பாஸ்போர்ட் அளவு வண்ணப் புகைப்படம் அனுப்ப வேண்டும். ● பெயர், வயது (பிறந்த தேதி) வகுப்பு, பள்ளியின் பெயர், பின்கோடோடு கூடிய வீட்டு முகவரி, தொலைபேசி எண், பங்கேற்கும் நிகழ்ச்சி ஆகியவற்றைத் தனியாக ஒரு தாளில் எழுதி கதையுடன்/ஓவியத்துடன் அனுப்பவும். ● சொந்தக் கற்பனை/சொந்த முயற்சி என்பதற்கு பெற்றோரின் கையொப்பமிட்ட சான்றிதழ் அனுப்ப வேண்டும். ● உறையின் மீது "குழந்தைகளின் சிறப்பிதழ்" என்று மறக்காமல் குறிப்பிடவும்.

கடைசி தேதி: செப்டம்பர் 15, 2005.

சந்தமாமா இந்தியா லிமிடெட்
82, டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல்
சென்னை-600 097.

## உங்கள் விஞ்ஞானம்

### மூளையில் உருவாகும் மின் அலைகள்



சில சமயங்களில் நாம் யோசித்துக் கொண்டிருக்கும்போது திடீரென ஒரு நல்ல யோசனை தோன்றுவதுண்டு. ஆங்கிலத்தில் இதை பிரெயின் வேவ் என்று சொல்வதுண்டு. ஆனால் நமக்கு ஒரு நல்ல யோசனை தோன்றும் போதுதான் பிரெயின் வேவ் உண்டாவதாக நினைப்பது தவறு. இந்த மின் அலைகளை என்செஃபெலோகிராஃப் அல்லது EEG எனும் கருவியின் மூலம் கண்டு பிடிக்கலாம். எல்லா மின் அலைகளும் ஒன்று போல் இருப்பதில்லை. நாம் ஓய்வாக இருக்கும் போது மூளையில் ஆல்ஃபா மின் அலைகளும், சுறுசுறுப்பாக வேலை செய்யும்போது பீட்டா அலைகளு ம் உருவாகின்றன. தீட்டா அலைகள் குழந்தைகளுக்கு மட்டும்தான் உண்டாகும். அதுவே பெரியவர்களின் மூளையிலிருந்து வெளிப்பட்டால் ஏதோ கோளாறு என்று சந்தேகிக்கலாம்.

## உங்கள் சுற்றுப்புறம்

### பப்பாளி மரம் வளருங்கள்

உங்களுக்குத் தோட்டம் போடும் வசதி இருந்தால் கட்டாயம் பப்பாளி மரம் ஒன்றை பயிரிடுங்கள். பப்பாளிப் பழத்திற்குப் பல அற்புத குணங்கள் உள்ளன. பப்பாளி மரத்தை இலேசாக வெட்டினால், பால் போன்ற வெண்மையான சாறு வெளி வருகிறது. இதற்கு பப்பாயின் என்று பெயர். பப்பாயின் சத்து பப்பாளிப் பழத்தில் நிரம்பியுள்ளது. காயாக இருக்கும் போது 'ஏ' வைட்டமின் நிறைந்துள்ளது. இது குழந்தைகள் உடலுக்கு மிகவும் தேவை. பழுத்த பிறகு 'சி' வைட்டமினும் கணிசமாக பழத்தில் சேர்வதால் பழம் உண்பது மிகவும் நல்லது. தினமும் பப்பாளிப் பழம் உண்டால் மலச்சிக்கல் வயிற்றுப் போக்கு வராமல் தடுக்கும். நல்ல பசி ஏற்படும். தினமும் காலையில் பப்பாளிப் பழம் உண்டால், அது இரத்த அழுத்தத்தை கட்டுப் படுத்தும்.



# உங்கள் பக்கங்கள் உங்கள் பக்கங்கள்

## உங்களுக்குத் தெரியுமா?

### வானம்பாடியின் சாமர்த்தியம்



நீங்கள் சிரமப்பட்டு கட்டிய வீட்டில் வேறு ஒருவர் புகுந்து கொண்டால் உங்களுக்கு எப்படி இருக்கும்? மிகுந்த கோபம் உண்டாகும் இல்லையா? ஆனால் எஜிப்டியன் லிசர்டு எனப்படும் பாலைவனத்தில் வா ழும் ராட்சசப் பல்லிக்கு கோபமே வருவதில்லை. அது நிலத்தில் தான் தங்குவதற்காக உருவாக்கும் வளைகளில் வானம் பாடி பறவை புகுந்து ஓய்வு எடுத்துக் கொள்ள அனுமதிக்கிறது. இந் த ராட்சசப் பல்லி தாவர உணவுகளை மட்டுமே உட்கொள்ளுவதால் இதன் மூலம் வானம்பாடிக்கு அபாயம் எதுவும் இல்லை. ஆதலால் பகல் வேளைகளில் பல்லி இரை தேடும் சமயம், அந்த வளைக்குள் வானம் பாடி பு குந்து கொண்டு ஓ ய்வு எடுக்கிறது.

## நம் இந்தியா

### தென்னிந்திய மாநிலங்களைப் பற்றிய புதிர்



1. குச்சிப்புடி நடனம் எந்த மாநிலத்தில் முதன்முதலாகத் தோன்றியது?
2. தக்காண பீடபூமியில் பாயும் ஆறுகளில் மிக நீளமானது எது?



3. பழங்கால போர் பயிற்சி முறையிலிருந்து தோன்றிய நடனம் கதக்களி. அந்தப் போர் பயிற்சியின் பெயர் என்ன?



4. எந்த தென்னிந்திய எழுத்தாளருக்கு 2002ஆம் ஆண்டுக்கான ஞானபீட் இலக்கியப் பரிசு கிடைத்தது?
5. தென்னிந்தியாவிலுள்ள ஒரு பிரபல விளையாட்டரங்களில் புகையிலை எந்த வடிவத்திலும் அனுமதிக்கப் படுவதில்லை. அந்த விளையாட்டரங்கு எது?
6. அகில உலக ஆன்மீகச் சங்கத்தின் தலைவராக செயற்பட்டு, சமீபத்தில் காலஞ்சென்ற தென்னிந்தியரின் பெயர் என்ன?

(விடைகள் 70ஆம் பக்கம்)

# போட்டோ வாக்கியப் போட்டி

**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**


NARAYANAMURTHY TATA


NARAYANAMURTHY TATA

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவு நவம்பர் 2005 இதழில் வெளியிடப்படும்.
**போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.**

**வாழ்த்துகள்!**

**பரிசு பெற்றவை**

**ஜூலை 2005 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :**

**விஜயலட்சுமி வேங்கடேசன்**
***ப.எண் 2/408, பு.எண் 2/257,***
***1வது தெரு, கற்பகம்பாள் நகர்,***
***கொட்டிவாக்கம்,***
***சென்னை - 600 041.***





"தண்ணீர் இங்கு
கிடைக்குமா கொஞ்சம்;
தண்ணீருக்கு இங்கு
இல்லை பஞ்சம்."

## நம் இந்தியா - விடைகள் (பக்கம் 69)

1. ஆந்திரப் பிரதேசம்.
2. கோதாவரி.
3. ராமனாட்டம்.
4. தமிழ் எழுத்தாளர் ஜெயகாந்தன்.
5. கொச்சியிலுள்ள ஜவஹர்லால் நேரு இன்டர்நேஷனல் ஸ்டேடியம்.
6. ராமகிருஷ்ணா மிஷனைச் சேர்ந்த சுவாமி ரங்காநாதானந்தா.

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 26 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : B. Viswanatha Reddi (Viswam)

# எண்ணெயின் கதை



பெட்ரோலியம் சுத்திகரிப்பு ஆலையில் பணிபுரியும் பொறியியல் வல்லுனர் திரு தாஸ் பெட்ரோலியத்தைப் பற்றி வீணாவின் வகுப்பில் உரையாற்றிக் கொண்டிருந்தார்.

''இன்றைய நடைமுறை வாழ்க்கையில், பெட்ரோலியப் பொருட்கள் அத்தியாவசிய மானவை,'' என்ற திரு தாஸ், ''உதாரணமாக, நீங்கள் தினசரி பல்துலக்கும் பிரஷ், பால் பைகள், பேனா எல்லாமே பெட்ரோலியத்திலிருந்து செய்யப்படுகின்றன என்று உங்களுக்கு தெரியுமா?'' என்று வினா எழுப்பினார். அதைக் கேட்டதும் பலரும் ஒரே சமயத்தில் சந்தேகங்கள் கேட்கத் தொடங்கினர்.

''அப்படியா! பல் துலக்கும் பிரஷ் பெட்ரோலியத்திலிருந்து தயாரிக்கப்படுகிறதா?'' என்று பலரும் கேள்விகளை எழுப்பினர்.

அவர்களுடைய ஆர்வத்தை ரசித்தவாறே, திரு தாஸ், ''நான் குறிப்பிட்ட பொருட்கள் எல்லாம் பிளாஸ்டிக்கினால் ஆனவை. பிளாஸ்டிக் பெட்ரோலியத்திலிருந்து தயாரிக்கப்படுகிறது!'' என்று விளக்கினார். ''பெட்ரோலியம் எப்பொழுதிலிருந்து பயன்படுத்தப்படுகிறது?'' என்று கேட்டாள் வீணா.

''பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே பெட்ரோலியம் பயன்படுத்தப்படுகிறது. எகிப்தியர்கள் இறந்தவர்களின் உடல்களைப் பாதுகாக்க பெட்ரோலியத்திலிருந்து தயாரிக்கப்பட்ட பிச்சுக்கட்டியைப் பயன்படுத்தினர். பூமியிலிருந்த பிளவுகளின் வழியே கசிந்து கொண்டிருந்த பெட்ரோலியத்தைக் கொண்டு, சுமேரியா, பாபிலோனியா, அசீரியா போன்ற நாடுகளைச் சேர்ந்தவர்கள் சாலைகளுக்கும், கட்டடங்களுக்கும் 5,000ம் ஆண்டுகளுக்கு முன்னரே பயன்படுத்தி வந்தனர். கி.மு.2000ஆம் ஆண்டிலேயே, சீனர்கள் பெட்ரோலியத்தை விளக்கெரிக்கப் பயன்படுத்தினர்!'' என்றார் திரு தாஸ்.

''பெட்ரோலியம் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே கண்டு பிடிக்கப் பட்டு விட்டது என்பது அச்சரியமாக உள்ளது!'' என்றாள் சுனிதா.

''ஆச்சரியம்தான்! ஆனால் இதை விட ஆச்சரியமான விஷயங்களையும் கூறப் போகிறேன்!'' என்றார் திரு தாஸ்.

AMBULIMAMA(TAMIL) SEPTEMBER 2005 REGD NO.TN/PMG(CCR)-592/03-05
REGD. WITH REGISTRAR OF NEWSPAPER FOR INDIA NO.1095/57
LICENSED TO POST WITHOUT PREPAYMENT NO.377/03-05 FOREIGN - WPP NO.378/03-05